# My My!
# My choice for the MAN

**Century's** ***Cosy-Cot*** **COTTON SHIRTING** with rich woollen feel






CENTURY for 100% cotton textiles

THE **CENTURY** SPG. & MFG. CO. LTD., BOMBAY 25 DD

For Fashion Fabrics choose *Century Shirtings!*

MPS-CH 15

# கல்கி பொருளடக்கம்

பரிதாபி, மார்கழி 10 ■ டிசம்பர் 24, 1972







| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
| --- | --- | --- |
| இந்தியா | ரூ. 23-00 | ரூ. 11-50 |
| இதர நாடுகள் | ரூ. 50-00 | ரூ. 25-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 27-00 | ரூ. 13-50 |


மார்கழி பஜனை
சோஷலிஸம் பஜே பஜே!
தேசிய மயம் பஜே பஜே!
உச்சவரம்பு பஜே பஜே!


லஞ்ச ஊழல்
வெள்ளம்
தமிழர்


வெள்ளை விளிச் சங்கின் பேரரவம் கேட்டிலையோ! பிள்ளாய் எழுந்திராய்!
திருப்பள்ளி எழுச்சி!


'178 மெஜாரிட்டி' குஷன்

கல்கி

மலர் 32
இதழ் 21



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
— பாரதியார்

# சிம்லா உடன்பாட்டின் முதல் பலன்

ஜம்மு—காச்மீரப் பகுதியில் ஆதிக்க எல்லைக்கோடு வரையறைப் படங்களைப் பாரதம், பாகிஸ்தான் ஆகிய இரு நாடுகளும் ஏற்றுக் கொண்டு கையெழுத்திட்டுள்ளன. நெடுநாட்களாக அநாவசியமாக நீடித்துக் கொண்டிருந்த சிம்லா உடன்படிக்கை முதல் கட்ட நடவடிக்கையைச் சுமுகமாக முடித்துக் கொண்டதற்கு இரு நாட்டுத் தலைவர்களையும் பாராட்ட வேண்டும்.

நமது அரசாங்கத்தின் பொறுமையைச் சோதிக்கும் வகையில் இப்பிரச்னை நீடித்தது. பாகிஸ்தானிலிருந்து வந்த செய்திகளும், ஆத்திரமூட்டும் பேச்சுக்களும், அயல்நாட்டுத் தலையீடுகளும், ஒன்றுக்கொன்று முரணான நடவடிக்கைகளும், சிம்லா உடன்பாடே தாஷ்கெண்ட் உடன்பாட்டைப் போலப் பலனற்றுப் போய்விடுமோ என்று அஞ்சும்படி செய்தன. இவ்வளவு நெருக்கடிகளுக்கிடையிலும் நமது நிதானத்தை இழக்காமல், பாகிஸ்தானின் நல்லெண்ணத்தில் நம்பிக்கை இழக்காமல், மெச்சும் வகையில் சமாதானத்தையும், நல்லுறவையுமே பெரிதாக மதித்து, ராஜதந்திரத்துடன் நடந்து கொண்டதற்குப் பிரதமர் இந்திரா காந்தியை நாடு பாராட்டுகிறது.

சில பகுதிகளை விட்டுக் கொடுத்தும், சில பகுதிகளை ராணுவரீதியில் ஒழுங்குபடுத்தியும், ஆதிக்க எல்லைக்கோட்டை நிர்ணயம் செய்ய வேண்டியிருந்தது. இதில், நாம் விட்டுக் கொடுத்துவிட்டோம், தோல்வி மனப்பான்மையுடன் நடந்து கொண்டு விட்டோம், இன்னமும் கண்டிப்புடனேயே இருந்திருக்கலாம், என்றெல்லாம் குறை சொல்வதில் பொருள் இல்லை. இருபத்தைந்து ஆண்டு காலமாகத் தீர்வு காண முடியாத பிரச்னைக்கு வெளியார் தலையீடில்லாமல் தீர்வு காண முற்படும்போது, நெகிழ்ந்து கொடுக்கும் மனப்பான்மையுடன் நடந்து கொள்வதுதான் முறை.

பழைய போர் நிறுத்தக் கோடு, ராணுவ ரீதியில் இரு நாடுகளுக்குமே பாதுகாப்பான 'கோடு' அல்ல. இதை நிரந்தரமான எல்லையாக மாற்றிக் கொள்ளவும் முடியாது. ஐ.நா.வின் தலையீடும், பார்வையாளர்களின் கண்காணிப்பும், கூடவே நீடித்துக் கொண்டிருக்கின்றன. இந்த நிலைமையில் இரு நாடுகளும் தங்களுக்குள்ளாகவே ஓர் ஆதிக்க எல்லைக்கோட்டை வகுத்துக் கொண்டது முன்னேற்ற நடவடிக்கையே ஆகும். சுயேச்சையுடன் ஒப்புக் கொண்டு நிர்ணயித்துக் கொண்டதால், இதைப் புறக்கணிப்பதும், இதை மீறி ஊடுருவல் போன்ற ஆத்திரமூட்டும் நடவடிக்கைகளை மேற்கொள்ளுதலும் இனி நடவாது என்று எதிர்பார்க்கலாம்.

இதனால் காச்மீரப் பிரச்னை தீர்ந்து விடவில்லை என்பது உண்மைதான். என்றாலும், இந்தச் சுமுகமான மனப்பான்மை, அடுத்த நடவடிக்கைகளை மேற்கொள்ள இசைவானது என்பதைக் கவனிக்க வேண்டும். பங்களா தேச அங்கீகாரத்துக்கும் இந்த முதல் படிவ ஆதிக்கக் கோடு நிர்ணயம், பெரும்பாலும் உதவும் என்று எதிர்பார்க்கலாம். பங்களா தேசப் போர்க் கைதிகள் பிரச்னைக்கு முடிவு காணவும், இந்த உப கண்டத்தில் அமைதி காணவும் அடுத்த நடவடிக்கையை — அதிகாரிகள் மட்டத்திலோ, மற்றெந்த மட்டத்திலோ—ஆரம்பிப்பது அவசியம். நல்லெண்ணம் பசுமையாக இருக்கும் போதே அதை நிலைக்கச் செய்வதுதான் விவேகம்.

இது வரையில் காட்டிய நிதானமும், பொறுமையும், ராஜதந்திரமும் நீடித்து, எஞ்சி நிற்கும் இதர பிரச்னைகளையும் வெற்றிகரமாகத் தீர்த்துக் கொள்ள ஆண்டவன் அருள்வானாக.







# வான மழை விட்டது; கான மழை இதோ!

வடமொழியில் வருஷம் என்றாலே மழை என்று பொருள். தமிழ்நாட்டைப் பொறுத்தமட்டில் ஆங்கில வருடம் ஒன்று முடிந்து புது வருடம் தொடங்கும் பருவம் வடமொழி வருஷமாகவே இருக்கிறது—இசைமாரியைத்தான் சொல்கிறோம். வழக்கம்போல் சென்னைமா நகரில் இந்த ஆண்டும் மியூஸிக் அகாடெமி, தமிழிசைச் சங்கம், இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸ், கலாக்ஷேத்திரம் ஆகியன இசைவிழாக் கொண்டாடுகின்றன.

மியூஸிக் அகாடெமியின் ''சங்கீத கலாநிதி'' விருது பேராசிரியர் பி. சாம்பமூர்த்தி அவர்களைச் சென்றடைகிறது. பலப் பல ஆண்டுகளாக இசை ஆராய்ச்சியில் மூழ்கித் தேர்ந்து முதிர்ந்தவர் ஸ்ரீ சாம்பமூர்த்தி அவர்கள். சென்னை சர்வகலாசாலை இசைப் பேராசிரியராக நீண்ட காலம் அரும்பணி ஆற்றியிருப்பவர். கர்நாடக சங்கீத போதனைக்கென ஆரம்ப பாடத்திலிருந்து படிப் படியாகப் பல அற்புத நூல்களைப் படைத்திருப்பவர். அவரது இசை ஆராய்ச்சிக் கட்டுரைகளும், சொற்பொழிவுகளும் எண்ணிலடங்கா. மேடைக் கலைஞர் அல்லவாயினும் ஆராய்ச்சி மேதையாகிய அவரிடம் பயிற்சி பெற்ற பலர் மேடைக் கச்சேரி வித்வான்களாகப் பெயரெடுத்துள்ளனர். சங்கீத சாஸ்திரப் புலவரேறாகிய ஸ்ரீ சாம்பமூர்த்தி அவர்களுக்கு சங்கீத கலாநிதி விருது சூட்டப்படுவது மிகவும் பொருத்தம்.

குடியரசுத் தலைவர் ஸ்ரீ கிரி தொடங்கி வைக்கிற அகாடெமி விழாவின் சதஸுக்கு இசை உலகத் தலைவர் (சங்கீத சம்ராட்)என்று பட்டம் பெற்ற முதுபெரும் வித்வான் செம்பை ஸ்ரீ வைத்தியநாத பாகவதரவர்கள் தலைமை தாங்குவதும் மிகப் பொருத்தமாகும்.

தமிழிசைச் சங்கத்தில் இவ்வாண்டு இசைப் பேரறிஞர் விருதினைப் பெறுகிறவர் திரு பெரியசாமி தூரன் அவர்கள்

- ராஷ்டிரபதி திரு வி. வி. கிரி
- திரு பி. சாம்பமூர்த்தி
- செம்பை திரு வைத்தியநாத பாகவதர்
- தமிழக சுகாதார மந்திரி திரு அன்பழகன்
- திரு ம. ப. பெரியசாமி தூரன்
- தமிழக கவர்னர் திரு கே. கே. ஷா
- திருவீழிமிழலை திரு சுப்பிரமணிய பிள்ளை





ஆவார். அவர் தமிழ்ப் பேரறிஞர்; இலக்கியப் பேரறிஞர்; ஆராய்ச்சிப் பேரறிஞர். அறிஞராக இருக்கிற பெருமை ஒரு புறம் இருக்கட்டும். கனிந்த பக்தியின் தன்மையும் அடக்கத்தின் மென்மையும் பெற்றவர். நெஞ்சை உருக்கும் தமிழால் இசைப் பாடல்கள் இயற்றி இறைத்தொண்டு புரிகிற நல்ல ஜீவன் திரு தூரன். தமிழிசை விழாவைத் தொடங்கி வைக்கிறார் தமிழக சுகாதார மந்திரி திரு அன்பழகன்.

இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸ் சொஸைட்டியின் கலை விழாவைத் தொடங்கிவைப்பவர் தமிழக ஆளுனர் திரு கே. கே. ஷா அவர்கள். விருது பெறும் விற்பன்னர் திருவீழிமிழலை சுப்பிரமணிய பிள்ளை அவர்கள். நாகஸ்வர உலகில் அனைவரின் பாராட்டுக்கும் மதிப்புக்கும் பாத்திரரான ஜாம்பவான் திரு பிள்ளை அவர்கள். 'பெரிய மேளம்' என்கிற பெயரில் உண்டான ஒரு மகத்தான பத்ததியில் முறைப்படி வாரிசாக வந்துள்ள கலைஞர்.

பட்டம் பெறும் பெரியவர்களுக்கு நமது வாழ்த்துக்களையும் வணக்கத்தையும் அளிக்கிறோம்.







பிரதமர் விரைவில் தமிழகம் வரவிருக்கிறார்.



நம்பிக்கைத் தீர்மானத்தை எதிர்த்துச் சட்டசபையில் சுதந்திரா தலைவர் ஹாண்டே இரண்டு மணி நேரம் பேசினார்.

# தமிழ் நாட்டிலே...

தீரன்

## புயல் மழையால் பாதிப்பு

‘தமிழ் நாட்டில் புயல் சின்னங்கள் உருவாகியுள்ளன’ என்று அடிக்கடி அறிவிக்கப்பட்டபோது ஆவல் நிறைந்த பொதுமக்களுக்கு ஏதேதோ அர்த்தங்கள் தோன்றின. கடைசியில் அந்தப் புயல் சின்னங்களாலும் பொதுமக்கள்தாம் பாதிக்கப் பட்டிருக்கிறார்கள். புயலாலும் பெரு மழையினாலும் சேலம், தென்னார்க்காடு மாவட்டங்கள் பயங்கரமாகப் பாதிக்கப்பட்டிருக்கின்றன. அங்கங்கே சாலைகளும், இரயில் பாதைகளும் சீர்கெட்டு பஸ், இரயில், போக்குவரத்து ஸ்தம்பித்துப் போகிற நிலை ஏற்பட்டது. தென் மாவட்டங்களோடு செய்தித் தொடர்பு இல்லாமல் போயிற்று. சேலம் மாவட்டத்தில் மணிமுத்தாற்றிலும், தென்னார்க்காடு மாவட்டத்தில் பெண்ணையாற்றிலும் அதி பயங்கரமான வெள்ளப் பெருக்கு ஏற்பட்டதன் விளைவாகச் சேலம் நகரமும், தென்னார்க்காடு மாவட்டத்தின் சில பகுதிகளும் தனியே துண்டிக்கப்பட்டு விட்டன. வெள்ளத்தில் சிக்கித் தவிக்கும் மக்களை மீட்பதற்கு ராணுவ விசைப் படகுகளும், ஹெலிகாப்டர்களும் வந்திருக்கின்றன. சென்னை நகரிலும் தாழ்வான பகுதிகளும் குடிசைகளும் பெரு மழையால் பாதிக்கப்பட்டுள்ளன.

வெள்ள நிவாரண நிதிக்குப் பொருளுதவி செய்ய விரும்புவோர்: ராமகிருஷ்ண மடம், சென்னை-4 என்ற விலாசத்துக்கு அனுப்பலாம்.

## 67 பக்கப் புகாரும் 286 பக்கப் பதிலும்

எம்.ஜி.ஆர். முதலியவர்கள் குடியரசுத் தலைவரிடம் கொடுத்துப் பிரதமரிடம் வந்து தமிழ் நாடு முதல்வருக்கு அனுப்பப்பட்ட லஞ்ச ஊழல் புகார்களையும், அவற்றுக்கான பதில்களையும் டிசம்பர் 14ந் தேதி சட்டசபையில் கொடுத்துவிட்டார்கள். சில பதில்களில் ஏராளமான முரண்பாடுகள் இருப்பதாக எம். ஜி. ஆர். கட்சி அமைப்பாளர் அன்று மாலையே ஒரு பொதுக் கூட்டத்தில் கண்டித்திருக்கிறார். புகார்களையும், அவற்றுக்கான விளக்கப் பதிலையும் சட்டசபையில் கொடுத்ததற்கும் மேலாகப் பிரதமருக்குத் தாம் எழுதியுள்ள கடிதத்தில், **''அரசியல் சட்டப்படி மத்திய அரசுக்கு மாநில மந்திரி சபை பதில் சொல்வதற்கு அவசியமில்லை. மாநில அரசை விசாரிக்க மத்திய அரசுக்கு அதிகாரம் எதுவும் இல்லை. இங்கிலையில் மத்திய அரசு விசாரணைக் கமிஷன் அமைத்தால் அது அரசியல் சாசனத்தையே குலைப்பதாக அமைந்து விடும்''** என்று பொருள் படும்படியான வாசகங்களைத் திரு கருணாநிதி தம் பதிலில் எழுதியிருப்பதாகத் தெரிகிறது. மேலும், ''ஒரு சில எம். எல். ஏ.க்கள் கட்சி மாறிவிட்டால் அதற்காக ஆட்சியே மாற வேண்டும் என்றால் 5 வருடங்களுக்கு ஒரு முறை தேர்தல் நடக்காது. 5 மாதங்களுக்கு ஒருமுறை தான் தேர்தல் நடக்கும்'' என்றும் பிரதமருக்கு எழுதியுள்ள கடிதத்தில் திரு கருணாநிதி கூறியிருக்கிறார் என்று தெரிகிறது. ஒரு சில எம். எல். ஏ.க்கள் கட்சி மாறிவிட்டார்கள் என்பதுமட்டும் அல்ல, தமிழகத்தில் உள்ள இன்றைய நிலைமை. ஆளும் கட்சி இரண்டாகப் பிளவுபட்டிருப்பதோடு எந்தக் கட்சிகளின் பக்கபலத்துடன் அது பதவிக்கு வந்ததோ அந்தக் கட்சிகள் பல இன்று அதை ஆதரிக்கவில்லை. மேலும் மக்கள் இன்றைய ஆட்சியை விரும்பவில்லை என்பதையும் வலுவான விதத்தில் உணர்த்தியுள்ளார்கள்.




விசாரணைக் கமிஷன் அமைப்பதைப்பற்றி திரு மு. கருணாநிதி ஏன் இவ்வளவு பயந்து நடுங்க வேண்டும் என்பதும் புரியவில்லை. 67 பக்கப் புகாருக்கு 286 பக்கம் விளக்கமாக மறுமொழி எழுதும் அளவுக்கு 'கைசுத்தமாக' இருக்கும் நிலைமையில் விசாரணைக் கமிஷனைச் சந்திப்பதற்கு மட்டும் ஏன் பயம், என்ன தயக்கம் என்பது மக்களின் சந்தேகமாக இருந்துதானே தீரும்? மக்களின் சந்தேகத்தைப் போக்கி நிரூபிக்கவாவது முதல்வர் தாமே முன் வந்து விசாரணைக் கமிஷன் அமைக்கச் சொல்லி இணங்குவதுதான் நல்லதாக இருக்கும்.

## நகர்ப்புற நிலவரி

தமிழ் நாடு அரசாங்கத்தின் நகர்ப்புற நிலவரியில் முன்பு ஒரு மனையும் அதற்குக் குறைந்த அளவுள்ள இடங்களுமே விதிவிலக்காகி யிருந்தன. இனி இரண்டு மனைகள் (இரண்டு கிரவுண்டுகள்) வரை வைத்திருப்பவர்களுக்கு விதிவிலக்கு உண்டு என்று தெரிகிறது. பெரும்பாலான வீடுகள், ஒரு மனை, இரண்டு மனை எல்லைகளின் அளவிலேயே இருப்பதால் மத்தியதர வகுப்பைச் சேர்ந்த பலர் வரி விதிவிலக்கு வரம்பை உயர்த்தி இருப்பதால் பயனடைய முடியும் என்பது உறுதி. இரண்டு மனைகளுக்கு மேல் வைத்திருப்பவர்களுக்கும்கூட அந்த இரண்டு மனை அளவைக் கழித்துவிட்டு எஞ்சிய பகுதிக்கே நகர்ப்புற நில வரி விதிக்கப்படும் என்று கூறப்பட்டிருக்கிறது. சொந்தக்காரர்களால் தங்கள் குடியிருப்புக்கு மட்டுமே பயன்படுத்தப்படும் வீடு உள்ள மனைக்கு, முன்பு

இருபத்தைந்து சதவீத வரிச் சலுகைதான் அளிக்கப்பட்டிருந்தது. இப்போது அந்தச் சலுகை ஐம்பது சதவீதமாக உயர்த்தப்பட்டிருக்கிறது. பெருவாரியான மத்தியதர வர்க்கத்துக்கு நன்மை தரும் இந்தத் திருத்தம் வரவேற்பதற்குரியது.

## கண்டக்டர்களுக்குப் பயிற்சி

பல்லவா போக்குவரத்து (பலர் கேலி செய்வது போல் தள்ளவா போக்குவரத்து அல்ல) பஸ் கண்டக்டர்கள் 3600 பேருக்குப் பொது மக்களிடம் எப்படி எப்படி நடந்து கொள்ள வேண்டும், எப்படி எப்படி நடந்து கொள்ளக்



கூடாது என்பதைக் கற்பிக்க ஒரு பயிற்சி வகுப்பு நடந்ததாம். இப்போது நடக்கிற இந்த வகுப்புத் தவிர ஏற்கனவே ஆயிரம் பேருக்கு இப்படிப் பயிற்சி தரப்பட்டுவிட்டது என்கிறார்கள். பிரயாணம் செய்யும் பொது மக்களிடம் மரியாதையாக நடந்து கொள்ள வேண்டும், டிக்கட் கொடுக்கும்போது விரலை எச்சிலில் தோய்த்து டிக்கெட் கொடுக்கக் கூடாது, மாணவர்களுடன் மோதல்களைத் தவிர்க்க வேண்டும் — என்றெல்லாம் இந்தப் பயிற்சி வகுப்புக்களில் சொல்லிக் கொடுத்திருக்கிறார்களாம். ஒரே ஒரு சந்தேகம். இந்த வகுப்புக்களில் சொல்லிக் கொடுப்பதை எல்லாம் 'கடைப்பிடிக்க வேண்டும்' என்பதைச் சொல்லிக் கொடுத்திருக்கிறார்களா இல்லையா என்பதுதான் நமக்குப் புரியவில்லை. வகுப்பு நடத்துபவர்கள் அதையும் சொல்லியனுப்புவதுதான் நல்லது.

## தொழிலாளிகளும் மாணவர்களும்

“தமிழ் நாட்டில் இன்றைய தி.மு.க. அரசு பிரச்னைகளைத் திசை திருப்புவதற்காகத் தொழிலாளர்களை மாணவர்களுக்கு எதிராகத் திருப்பிவிட்டு மக்கள் மத்தியிலே குற்றம் சாட்டுவதற்கு முயன்று வருகிறது. அரசின் மேல் மாணவர்களுக்கும், தொழிலாளர்களுக்கும் உள்ள அதிருப்தியை மறைக்க இந்தத் தந்திரம் கையாளப்படுகிறது. இந்த அபாயத்தில் தொழிலாளர்கள் சிக்கிக் கொள்ளக் கூடாது. தாங்கள் மாணவர் விரோதப் போக்குடையவர்கள் என்ற அபவாதம் ஏற்பட்டு விடாமல் தொழிலாளர்கள் அரசின் தந்திரத்திலிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்வதோடு மாணவர்களுக்கும் பாதுகாப்பு அளிக்க முன்வர வேண்டும். யாராவது ஒரு மாணவர் ஒரு தொழிலில் பணியாற்றுகின்ற ஒருவரின் தம்பியாகவோ, மகனாகவோ, உறவினராகவோதான் இருக்க முடியும். இதை நன்றாக உணர்ந்து மாணவர்களையும், தொழிலாளர்களையும் பிரித்துவிட முயலும் எந்தச் சூழ்ச்சியையும் முறியடிக்க இருசாராரும் எப்போதும் தயாராயிருக்க வேண்டும். தொழிலாளிகள் தங்கள் உடன் பிறப்புக்கள் போன்ற மாணவர்களைக் காப்பாற்ற வேண்டும்'' என்று அ.தி.மு.க. தலைவர் எம்.ஜி.ஆர் இங்குள்ள ஒரு நிலைமையை நன்கு விளக்கியிருக்கிறார். தொழிலாளிகளுக்கும், மாணவர்களுக்கும் மிகவும் பயன்படக்கூடிய சமயோசிதமான அறிவுரையாகும் இது.

## நம்பிக்கைத் தீர்மானம்

தி.மு.க. அரசு மீது டிசம்பர் மாதத் தொடக்கத்தில் சட்டசபையில் கொண்டு வந்த நம்பிக்கைத் தீர்மானத்தை ஓட்டுக்கு விட்டபோது (சபாநாயகர் அனுமதித்து டிசம்பர் 2ந் தேதி விவாதத்துக்கு விடப்பட்ட நம்பிக்கை இல்லாத் தீர்மானம் ஒருபுறம் இருக்க) எதிர்க்கட்சிகள் வெளிநடப்புச் செய்துவிட்டன. ஆனால் எதிர்க்கட்சிகள் வெளிநடப்புச் செய்த பின்னரும் உள்ளே வாக்கெடுப்பு நடத்தி வோட்டு எண்ணிக்கை நடத்தியிருக்கிறார்கள். இது பற்றி அன்று வெளிநடப்புச் செய்து சபை வாயிலில் நின்று கொண்டிருந்த டாக்டர் ஹாண்டே ''இப்படிச் செய்வது எந்த ஜனநாயகத்திலும் சேராது'' என்று விமர்சனம் செய்திருக்கிறார். அதே தினம் சட்டசபையில், தி.மு.க. பிரமுகர்கள் இல்லங்களில் சோதனைகள் நடத்த வருமான வரி, வரிவசூல் அமல்துறைகளைச் சேர்ந்த சில குட்டித் தேவதைகள் பயன்படுத்தப்படுவதாகவும், இதன் மூலம் தி.மு.க. செல்வாக்கைக் குறைத்து விடலாமென்று சிலர் நினைப்பதாகவும் இப்படி தி.மு.க.வை மிரட்டும் முயற்சிகளைப் பிரதமர் கவனத்துக்குக் கொண்டு வரப் போவதாகவும் கூறியிருக்கிறார் தமிழக முதல்வர். முதல்வரின் பேச்சைப் பார்த்தால் மிரட்டுவது யார் என்பது நமக்குப் புரியவில்லை.

## சட்டமன்றில் 'கணவாய்கள்'

தமிழ் நாடு சட்டசபையில் அமைச்சரவை மீது நம்பிக்கை கோரும் தீர்மானத்தின் மீது பேசுகையில் ஒரு தி. மு. க. உறுப்பினர் ''இப்போது கூடத் தேவை என்றால் தி.மு.க. பதவி விலகத் தயார். ஆனால் அதற்குப் பிறகு தமிழகத்தில் தமிழர் ஒருவர்தான் ஆட்சிப் பொறுப்பை ஏற்க வேண்டுமே தவிர கைபர் கணவாய் வழி வந்தவர்களோ, பாலக்காடு கணவாய் வழி வந்தவர்களோ ஆட்சி அமைக்கத் தமிழ் சமுதாயம் அனுமதிக்காது'' என்று கூறியிருக்கிறார். சட்டசபையில் இப்படிக் கணவாய்கள் பற்றிய பேச்சுக்கள் இடம் பெற்றிருக்கின்றன. சபை மரபு, கண்ணியம் பற்றிக் கவனித்தல் நலம்.

# நாம மகிமை

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள்

**இந்த ஜீவாத்மாவானது பரமாத்மாவுடன் தொடர்பு கொண்டிருக்க எளிய உபாயம் நாமசங்கீர்த்தனமே.**

தியானம், ஜபம், பூஜை, யக்ஞம், க்ஷேத்ராடனம் ஆகியவற்றைப் போலவே நம் தேசத்தில் நீண்ட காலமாக பகவந்நாமாக்களைக் கோஷ்டியாகப் பாடி பஜனை செய்கிற பழக்கமும் இருந்து வந்திருக்கிறது. இந்த ஜீவாத்மாவானது பரமாத்மாவுடன் தொடர்பு கொள்வதற்கு ஒரு பெரிய உபாயமாக நாம பஜனை தொன்றுதொட்டு நம் தேசத்தில் செய்யப்பட்டு வந்திருக்கிறது. அநேகமாகக் கிராமம், நகரம் எல்லாவற்றிலும் பஜனை மடம், அல்லது பஜனைக்கூடம் என்றே ஒன்று காணப்படுவதிலிருந்து பஜனை பத்ததி நம் நாட்டில் எவ்வளவு செழிப்பாக இருந்திருக்கிறது என்று ஊகிக்கலாம். இந்தப் பஜனைக் கூடங்களில் சனிக்கிழமைதோறும், ஏகாதசிதோறும் ஜனங்கள் எல்லோரும் சேர்ந்து பஜனை செய்வார்கள்.

கோயில்களில் பூஜையைப் பார்க்கிறோம்; தெய்வத்தைத் தியானிக்கிறோம். பஜனையிலோ நாமே வாய் விட்டுத் தெய்வத்தின் நாமங்களையும், குணங்களையும், லீலைகளையும் பாடி, ஈசுவரபரமாக மனசை ஈடுபடுத்துகிறோம். பலர் சேர்ந்துகொண்டு சமுதாய வாழ்க்கை அடிப்படையில் பக்தி செய்கிற சிறப்பு பஜனைக்கு உண்டு. இன்னிசையுடனும், வாத்திய கோஷத்துடனும் செய்கிற பஜனை எல்லா உள்ளங்களையும் சுலபமாக இழுத்து பகவத் ஸ்மரணத்தில் செலுத்துகிறது. 'ரகுபதி ராகவ ராஜாராம்', 'ஹரே ராம ஹரே ராம ராம ராம ஹரே ஹரே' என்பது போல் சுலபமான வார்த்தைகளை மதுரமான சங்கீதத்தோடு கலந்து செய்கிற பஜனையால் எளிதாகத் தெய்வத்தை நினைவு கொள்ள முடிகிறது.

பஜனைக் கூடம் என்ற ஓர் இடத்தில் அமர்ந்து பஜனை செய்வதோடு, நகர சங்கீர்த்தனம் செய்கிற பழக்கமும் உண்டு. வைகுண்ட ஏகாதசி போன்ற புண்ணியகாலங்களில் ஜனங்கள் எல்லோரும் பகவந்நாமாக்களைப் பஜனை செய்தபடி வீதி வீதியாகச் செல்வதுதான் நகர சங்கீர்த்தனம் எனப்படுவது. மார்கழி மாதத்தில் தினந்தோறும் இப்படி வீதி வீதியாக பஜனை செய்து ஊர் முழுதும் திவ்விய நாமங்களைப் பரப்புவதுண்டு.

இந்த நல்ல பழக்கம் மறுபடியும் நன்றாக உயிர்பெற்று வளர வேண்டும். கிராமங்களில் உள்ள பஜனைக் கூடங்களில் பகவந்நாமம் இல்லாமல் வெறுமையாகப் போக விடக்கூடாது. சமீப காலத்தில் பஜனை முறை நன்றாக விருத்தியடைந்து வருவதைப் பார்க்கச் சந்தோஷமாக இருக்கிறது.

பகவானிடம் பக்தி செழிக்க வைப்பதில் பகவானின் நாம சங்கீர்த்தனமும், பகவத் குணங்களைப் பாடுவதும் முக்கியமான ஸ்தானம் பெற்றுள்ளது. ஸ்ரீ பகவந்நாம போதேந்திரர்கள், "ஸதானந்த ஸ்வரூபியான பரமாத்மா, ஜகத்தின் க்ஷேமத்தைக் கருதித் தனிப்பெரும் கருணை கூர்ந்து ஸ்ரீ விஷ்ணு, ஸ்ரீ பரமேசுவரன் முதலிய ரூபங்களை எடுத்துக் கொண்டான். உலகை உய்விக்க அந்த மூர்த்திகள் மட்டும் போதாது என்று கருதி, 'ஹரி', 'சிவ' முதலிய நாமங்களாகவும் ஆகி, அவற்றில் எப்போதும் விழித்துக் கொண்டிருக்கிறான்" என்கிறார்.

இவ்வாறு நாமசங்கீர்த்தனத்தின் மூலம் பகவத் ஸ்வரூபத்தை சாக்ஷாத்காரம் செய்த புண்ணிய புருஷர்களின் முகாரவிந்தத்திலிருந்து உற்பத்தியான புனித கீதங்களைப் பாடுவதால், பாவம் விலகி, புண்ணியம் கைகூட வழி ஏற்படுகிறது. ஜயதேவர், தீர்த்த நாராயணர், ராமதாஸர், புரந்தரதாஸர், தியாகப்பிரம்மம், சதாசிவப் பிரம்மேந்திராள் ஆகியோரின் கீதங்கள், தமிழ்ப் பாடல்கள், ஹிந்தி, மகாராஷ்டிர பக்தி கீர்த்தனம் எல்லாம் மருதாநல்லூர் ஸத்குரு ஸ்வாமிகள் வகுத்துத் தந்த பத்ததியான சம்பிரதாய பஜனையில் பாடப்படுகின்றன. டோலோத்ஸவம், கொட்டகுறுத்ஸவம், வஸந்தகேளி என்றெல்லாம் பஜனையைப் பெரிய திருவிழாவாகக் கொண்டாடுவார்கள்.

பலர் சேர்ந்து பண்ணுகிற இந்தக் காரியங்கள் ஒருபுறம் இருக்கட்டும். ஒவ்வொரு குடும்பத்திலும் உள்ள அனைவரும் மாலைவேளைகளில் வீட்டிலேயே ஒரு பத்து நிமிஷமாவது பகவந் நாமங்களைப் பாடிப் பஜனை செய்ய வேண்டும். இதில் காரிய சாத்தியமில்லாத சிரமம் எதுவும் இல்லை. குடும்பத்தினர் எல்லோரும் பூஜை அறையில் — அல்லது பூஜைக்கென்று அறை இல்லாவிட்டால், ஒரு குத்து விளக்கை ஏற்றி வைத்து அதன் முன் உட்கார்ந்து கீர்த்தனங்களைப் பாட வேண்டும். நாமாவளிகளைக் கானம் செய்ய வேண்டும். அவரவர்களும் தங்களுக்குரிய நித்ய கர்மானுஷ்டானங்களை விடாமல் செய்து விட்டு, அதோடு பஜனையும் செய்ய வேண்டும்.. பகவானைப் பாடுவதற்கு வெட்கமே வேண்டாம். கருணையே உருவான கடவுளின் நாமத்தைச் சொல்வதில் வெட்கத்துக்கு இடம் ஏது? பெரிய சங்கீத ஞானம், ராக பாவம், சாரீர வசதி இல்லாவிட்டாலும் பரவாயில்லை., பக்தி பாவனைதான் முக்கியம். ஏதேதோ விளையாட்டுக்களில் திரிந்து கொண்டிருக்கிற குழந்தை அம்மாவின் நினைப்பு வந்ததும், அவளிடம் வந்து, 'அம்மா அம்மா' என்று கத்துகிறதல்லவா? அதில் வெட்கமோ, சங்கீத அழகோ இல்லை. லோக மாதாவான பரமாத்மாவை லௌகிக வியாபாரங்களிடையே சிறிது போதாவது நினைத்து இப்படியே ராமா, கிருஷ்ணா, சிவா, அம்பா என்று கத்த வேண்டும். இந்தப் பழக்கம் மிகவும் நல்லது. நம் நித்திய க்ஷேமத்தையும், ஆனந்தத்தையும் பெருக்க வல்லது.

# உங்கள் குரலைக் கேட்பதிலும் அரவணைப்பிலும் குழந்தைக்கு எவ்வளவு ஆனந்தம்! அவனுக்கு ஜான்ஸன்ஸ்*தரும் மென்மையான சருமப் பாதுகாப்பையும் அளியுங்கள்.

நீங்கள் குழந்தையை அணைத்துக் கொள்ளும்போது, அவன் இவ்விசித்திரமான புது உலகிலிருந்து பாதுகாக்கப்படுவதை உணருகிறான். ஜான்ஸன்ஸ் பேபி பௌடர் பூசி அவனுக்கு மேலும் இதமளியுங்கள். ஈரமான நாப்கின்கள் மற்றும் வியர்வையினால் ஏற்படும் அசௌகரியத்தைத் தடுத்து குழந்தைக்கு இதமளிப்பதில் ஜான்ஸன்ஸ் இணையற்றது என்பதை உலகெங்குமுள்ள தாய்மார்கள் அறிவார்கள். உடலிலுள்ள துவாரங்களை அடைத்துக் கொள்ளாத வகையில் அதன் துகள்கள்கூட விசேஷமாக உருவாக்கப்பட்டுள்ளன. அதன் மணமோ, மிக மென்மையானது. குழந்தைகளுக்கு மிகவும் பிடித்தமானது.

நாப்கின்களை மாற்றும்போதும், குளித்த பின்னும், படுக்கப்போகும் முன்னும் குழந்தைக்கு ஜான்ஸன்ஸ் பூசி இதமளியுங்கள். அது குழந்தைக்கு எப்போதும் குளுமையும் சுகமும் அளித்துப் புத்துயிரூட்டுகிறது! குழந்தைகளை மனதில் கொண்டு தயார் செய்யப்படுவதால் ஜான்ஸன்ஸ் ஒரு நிகரற்ற பௌடராகும். எவரும் உபயோகப்படுத்தலாம். நீங்களும் உபயோகியுங்கள்.




*ட்ரேட் மார்க்

ஜான்ஸன் & ஜான்ஸன்*

# அலை ஓசை

அமரர் கல்கி



## 21. குற்றச்சாட்டு

ஆக்ரா ரயில்வே ஸ்டேஷன் அமளி துமளிப்பட்டுக் கொண்டிருந்தது. வருகிற ரயில்களும் போகிற ரயில்களும் ஏகச் சத்தமிட்டன. பிரயாணிகளின் கூட்டம் சொல்லி முடியாது. ரயில்களிலும் சரி, ரயில்வே பிளாட்பாரத்திலும் சரி, காலி இடம் என்பதே கிடையாது. பிரயாணிகளில் பாதிப் பேர் ஆங்கில சோல்ஜர்களும் இந்தியச் சிப்பாய்களுமாவர். அப்போது உலக மகாயுத்தம் மிக நெருக்கடியை அடைந்திருந்த சமயம் அல்லவா? மாஜி சேனாதிபதி வேவல் இந்தியாவின் வைஸ்ராய் பதவியை வகித்து வந்தார். அது வரையில் அவர் சென்றிருந்த போர்க்களங்களி லெல்லாம் பிரிட்டிஷ் படைகள் பின்வாங்க வேண்டி நேர்ந்தது. இந்த அபகீர்த்தியைப் போக்கிக் கொள்ள விரும்பிய வேவல் துரை என்ன வந்தாலும் இந்தியாவிலிருந்து பின்வாங்குவதில்லை என்று தீர்மானித்துப் பிரமாத ராணுவ முஸ்திபுகளைச் செய்து வந்தார். ஆகவே இந்தியாவின் ரயில்கள் எல்லாம் அந்த 1943ம் வருஷம் பிற்பகுதியில் சிப்பாய்கள் மயமாயிருந்தன. ஸ்டேஷன் பிளாட்பாரங்களில் பெரிய பெரிய பீரங்கிக் குண்டுகளும் அவற்றின் கூடுகளும் கும்பலாக அடுக்கப்பட்டுக் கிடந்தன !.

பல ரயில் பாதைகள் சந்திக்கும் பெரிய ஜங்ஷன் ஆக்ரா; ஆதலால் அங்கே இடைவிடாமல் ரயில்கள் வந்த வண்ணமும் போன வண்ணமுமாக இருந்தன.

இரண்டாவது வகுப்புப் பிரயாணிகளுக்குரிய வெயிட்டிங் ரூமில் ஒரு மூலையில் சீதா உட்கார்ந்திருந்தாள். அவளுக்கு அருகில் ஒரு சிறிய டிரங்குப் பெட்டி இருந்தது. அதன் மேல் கையை ஊன்றிச் சாய்ந்து கொண்டிருந்தாள். அவளுடைய மனம் எங்கெல்லாமோ சஞ்சரித்துக் கொண்டிருந்தது.

ஐந்து வருஷங்களுக்கு முன்னால் அதே ஆக்ராவுக்குச் சீதா தன் கணவருடனும் சூரியாவுடனும் வந்திருந்தாள். கோட்டையிலிருந்த அரண்மனைகளையும் தாஜ்மகாலையும் பார்த்துப் பரவசம் அடைந்தாள். பற்பல இன்பக் கனவுகள் கண்டாள்.

அந்தக் கனவுகளையெல்லாம்விட அதிசயமான நிகழ்ச்சி நேற்று நடந்தது. சில மணி நேரம் அவள் தன்னை அரண்மனையில் வாழ்வதற்குரிய அரசகுமாரி என்று எண்ணிப் பெருமித ஆனந்தம் அடைந்திருந்தாள். ஆனால் அந்தப் பெருமித ஆனந்தம் ஒரு நொடியில், ஒரு வார்த்தையில், தகர்ந்து போய் விட்டது. அவள் வெறும் சீதா தான் என்றும் சாதாரண மனுஷிதான் என்றும் ஏற்பட்டது. அவளை அவ்விதம் மதி மயங்கச் செய்வதற்குக் காரணமாயிருந்தவர்கள் ஆக்ரா ஸ்டேஷனில் அவளைக் கொண்டு வந்து விட்டுவிட்டு, டில்லிக்கு ஓர் இரண்டாம் வகுப்பு டிக்கெட்டும் வாங்கிக் கொடுத்துவிட்டு, மாயமாய் மறைந்துவிட்டார்கள். ஆம், வெறும் டிக்கெட் மட்டும் கொடுத்து விட்டுப் போகவில்லை. அந்தச் சிறு டிரங்குப் பெட்டியையும் கொடுத்து விட்டுப் போனார்கள். அவளுக்கு ஏற்பட்ட கஷ்டத்துக்குப் பரிகாரமாக அதில் ஏதோ பரிசுப் பொருள் இருக்கிறதாம். ராணி அம்மாள் கொடுக்கச் சொன்னாளாம். ஆகா ! அந்த ராணி அம்மாளின் பரிசு இங்கே யாருக்கு வேணும்? வேண்டாம் என்று சொன்னாலும் கேட்காமல் வைத்துவிட்டுப் போய் விட்டார்கள்.

பெட்டியைத் திறந்து அதற்குள் என்ன இருக்கிறது என்றுகூடச் சீதா பார்க்கவில்லை.

சீதாவின் உள்ளம் அவளுடைய வருங்கால வாழ்வில் ஈடுபட்டிருந்தது.

அவளிடம் டில்லிக்கு டிக்கெட் இருப்பது உண்மைதான். டில்லிக்குப் போகும் வண்டியும் சீக்கிரத்தில் வந்துவிடும். ஆனால் டில்லிக்குப் போய் என்ன செய்வது? அவருடைய முகத்தில் எப்படி விழிப்பது? ''இரண்டு நாட்களாய் எங்கே போயிருந்தாய்?'' என்று கேட்டால் என்ன பதில் சொல்வது? ஏற்கனவே காரணமில்லாமல் தன்மீது எரிந்து விழுந்து கொண்டிருந்தவர் இப்போது தன்னை அடியோடு நிராகரித்து விடலாம் அல்லவா? சூரியாவோடு சேர்ந்து ஏதோ சதி செய்ததாக எண்ணிக் கொண்டிருக்கலாம் அல்லவா? அப்படி எண்ணிக் கொண்டிருந்தால் தன்னை எப்படி அவர் திரும்ப ஏற்றுக் கொள்வார்? நடந்த சம்பவங்களை எல்லாம் சொன்னால் உண்மையென்று நம்புவாரா? கட்டுக்கதை என்று சொல்ல மாட்டாரா? எல்லாவற்றையும் அனுபவித்த தனக்கே நடந்ததை நம்புவது கஷ்டமாயிருக்கிறதே! அவர் எப்படி நம்புவார்? அவரை விட்டுப் போய்விடுவது என்று முன்னால் உத்தேசித்திருந்தபடி செய்து விட்டால் என்ன? அப்படியானால் எங்கே போவது? சென்னைப் பட்டணத்தில் வஸந்தி இருக்கிறாள். ஆனால் அங்கே போய் மாமனார் மாமியார் முகத்தில் எப்படி விழிக்கிறது? திடீரென்று தனியாக வந்ததற்கு என்ன காரணம் சொல்லுகிறது? அதைக் காட்டிலும் சூரியா சொன்னபடி கல்கத்தாவுக்குப் போவது நல்லது. கல்கத்தாவில் லலிதாவின் சிநேகிதி இருக்கிறாள் அல்லவா? அவள் வீட்டுக்குப் போய் அங்கிருந்தபடி யோசித்து முதலில் சென்னைக்குக் கடிதம் எழுத வேண்டும். அங்குள்ள நிலைமையைத் தெரிந்து கொண்டு போவதுதான் உசிதமாக இருக்கும். ஆனால் பிற்பாடுதான் மதராஸுக்கு எதற்காகப் போக வேண்டும்? கல்கத்தாவில் சுதந்திரமாய் வாழ்வதற்கு ஒரு வேலை தேடிக் கொள்வதுதான் சரி. எத்தனையோ ஸ்திரீகள் இந்தக் காலத்தில் உத்தியோகம் பார்த்துக் கொண்டு சுதந்திரமாய் இருக்கிறார்கள். அதுபோல் தானும் ஜீவனத்துக்கு ஒரு வேலை தேடிக் கொண்ட பிறகு வஸந்திக்குக் கடிதம் எழுதி வரவழைத்துக் கொண்டால் என்ன?

இவ்விதம் சீதாவின் உள்ளம் டில்லிக்கும், சென்னைக்கும், கல்கத்தாவுக்கும் இடையே ஊசலாடிக் கொண்டிருக்கையில், அந்த வெயிட்டிங் ரூம் வாசலில் நின்று கொண்டிருந்த ஒரு முகம் சட்டென்று அவள் கண்ணில் பட்டுக் கருத்தைக் கவர்ந்தது. அப்படிப் பார்த்தவர் ஒரு முகம்மதியர். சுமார் ஐம்பது வயதுள்ள மனிதர். அவரை எப்போதோ பார்த்திருந்த ஞாபகம் சீதாவுக்கு வந்தது. அதனால் ஒருவிதப் பயம் உண்டாயிற்று. தன்னை அவர் உற்றுப் பார்க்கிறார் என்று தெரிந்ததும் பீதி அதிகமாயிற்று. முன்னால் அவரை எங்கே பார்த்திருக்கிறோம் என்ற யோசனை முற்றியது. தலைவலி எடுக்கும்வரை யோசித்த பிறகு சட்டென்று ஞாபகம் வரவும் செய்தது. கையில் ரத்தம் தோய்ந்த கத்தியுடன் ரஸியா பேகம் என்னும் ஸ்த்ரீ ஒரு நாள் இரவு ஒருவருக்கும் தெரியாமல் வீட்டில் புகுந்து ஸ்நான அறையில் தண்ணீர்க் குழாயைத் திறந்து விட்டிருந்தாள் அல்லவா? அந்தப் பயங்கரமான இரவில் தான் படுத்துத் தூக்கமின்றிப் புரண்டு கொண்டிருந்தபோது பலகணிக்கு வெளியேயிருந்து ஒரு புது முகம் தன்னையும் தாரிணியையும் உற்றுப் பார்த்ததல்லவா? அந்த மாதிரியல்லவா இருக்கிறது இந்தச் சாயபுவின் முகம்? ஒருவேளை அவனேதானோ? அப்படியானால் எதற்காக இங்கே வந்திருக்கிறான்? தன்னை எதற்காக அவன் வெறித்துப் பார்க்கிறான்?

ஆக்ரா மிகவும் பொல்லாத ஊர் என்று சீதா அடிக்கடி கேள்விப்பட்டிருந்தாள். பாதுகாப்பு இல்லாமல் அஜாக்கிரதையாக உள்ள ஸ்திரீகளைப் பிடித்துக்கொண்டு போய் விற்றுவிடக் கூடிய பாதகர்கள் அந்த ஊரில் உண்டு



என்றும் கேள்விப்பட்டிருந்தாள். இதற்கு முன்னால் தனக்கு நேர்ந்த கஷ்டமெல்லாம் போதாது என்று இன்னமும் கஷ்டம் ஏதேனும் காத்திருக்கிறதோ? ஆனால் இது இரயில்வே ஸ்டேஷன். இரவும் பகலும் ஆயிரக்கணக்கான ஜனங்கள் நடமாடிக் கொண்டிருக்கும் பொது ஸ்தலம். இங்கே தன்னை யார் என்ன செய்ய முடியும்? எதற்காகப் பயப்பட வேண்டும்? ஸ்திரீகள் தனியாகப் பிரயாணம் செய்வதற்குப் பயந்து கொண்டிருந்த காலம் போய்விட்டது. இப்போது எத்தனையோ பெண்கள் தன்னந் தனியாகப் பிரயாணம் செய்கிறார்கள். மதராஸிலிருந்து டில்லிக்கும் பம்பாயிலிருந்து கல்கத்தாவுக்கும் தனக்குத் தெரிந்த குடித்தன ஸ்திரீகள் எத்தனையோ பேர் போயிருக்கிறார்கள்? பின்னே எதற்காகப் பயப்பட வேண்டும்?

பயப்படக் காரணம் இல்லைதான். ஆனாலும் கல்கத்தாவுக்கோ மதராஸுக்கோ போவதைக் காட்டிலும் கிட்டத்தில் உள்ள டில்லிக்குப் போவதே நல்லது. தனக்கு நேர்ந்த அநுபவங்களை இவர் நம்பினாலும் நம்பாவிட்டாலும் சொல்லிவிட வேண்டும். சூரியாவின் கதி என்ன ஆயிற்று என்பதை யாவது தெரிந்துகொள்ள வேண்டாமா?

ஏதோ ஒரு ரயில் ராட்சத கர்ஜனை செய்து கொண்டு ஸ்டேஷன் பிளாட்பாரத்துக்குள் வந்தது. "டில்லி ரயில் வந்து விட்டது!" என்று சொல்லிக் கொண்டு வெயிட்டிங் ரூமில் இருந்தவர்களில் சிலர் எழுந்து போனார்கள். சீதாவும் அவசரமாக எழுந்து டிரங்குப் பெட்டியைத் தூக்கிக் கொண்டு வெளியே வந்தாள். வாசற் பக்கத்தில் நின்ற சாயபுவைப் பார்க்கக் கூடாது என்ற உறுதியினால் வேறு பக்கம் பார்த்துக்கொண்டு சென்றாள். ஆனால் அந்தச் சாயபுவின் செக்கச் சிவந்த உற்றுப் பார்க்கும் கண்கள் தன் பேரில் பதிந்திருக்கின்றன என்று அவளுடைய உள்ளுணர்ச்சி அறிவித்தது.

டில்லி ரயில் இது என்று தெரிந்து கொண்டதும், இரண்டாம் வகுப்பு வண்டிகளில் பெண்கள் வண்டியைத் தேடிப் பிடித்தாள். ஆனால் அந்த வண்டியில் பெண்களின் கூட்டம் ஏற்கெனவே அதிகமாயிருந்தது. புதிதாக ஏறப் பார்த்த சீதாவுக்கு அந்த ஸ்திரீகள் இடம் கொடுக்க மறுத்தார்கள். கதவை உட்புறம் தாளிட்டுக் கொண்டு திறக்க முடியாது என்று சொல்லி விட்டார்கள். பிறகு சீதா அதிக கூட்டமில்லாத வேறொரு இரண்டாம் வகுப்பு வண்டியைத் தேடிப் போனாள். முக்கியமாக சோல்ஜர்களும் சிப்பாய்களும் இல்லாத வண்டியாகத் தேடினாள். அத்தகைய கடகடத்த ஓட்டை உடைசல் வண்டி ஒன்று தென்பட்டது. அதில் அதிக ஜனங்கள் இல்லை என்பதைப் பார்த்து விட்டு ஏறினாள். ஏறி உட்கார்ந்ததும் அதே வண்டியில் ஏற்கனவே அந்த முகம்மதியர் ஏறியிருப்பது தெரிந்து திடுக்கிட்டாள். ஐயோ! இது என்ன? போயும் போயும் இதில் ஏறினோமே? யாரைப் பார்க்க வேண்டாம் என்று நினைத்தோமோ, அந்த மனிதன் இங்கு உட்கார்ந்திருக்கிறானே? இறங்கி வேறு வண்டி பார்க்க



லாமா? இறங்கி ஏறுவதற்கு இன்னும் நேரம் இருக்கிறதோ, இல்லையோ தெரியவில்லையே?

இப்படிச் சீதா தத்தளித்துக் கொண்டிருக்கையில் இரண்டு மனிதர்கள் அந்த வண்டியண்டை வந்து நின்றார்கள். ஒருவன் இன்னொருவனுக்குச் சீதாவைச் சுட்டிக் காட்டினான்.

இரண்டாவது மனிதன் சீதாவை உற்றுப் பார்த்துவிட்டு ''அம்மா! உன் பக்கத்தில் இருக்கிற பெட்டி உன்னுடையதா?'' என்று கேட்டான்.

''என்னுடையதுதான்; எதற்காகக் கேட்கிறாய்?'' என்றாள் சீதா. அவளுக்கு ஒரு பக்கம் கோபம் வந்தது; இன்னொரு பக்கம் ஏதோ அபாயம் வரப் போகிறது என்ற உணர்ச்சியினால் மனம் பதைபதைத்தது.

''உன்னுடையதா? நிச்சயந்தானா?''

''நிச்சயந்தான்!''

''அப்படியானால் ரயிலை விட்டுக் கீழே இறங்கு!'' என்றான் அந்த மனிதன். உடனே ஒரு விசிலை எடுத்து ஊதினான். இரண்டு ரயில்வே போலீஸ்காரர்கள் வந்து நின்றார்கள்.

''உம்; இறங்கு!'' என்று அதிகாரத் தொனியில் கட்டளையிட்டான்.

இச்சமயத்தில் ஒரு ரயில்வே உத்தியோகஸ்தர் அந்தப் பக்கம் வந்தார். சீதா, ''ஸார்!'' என்று அவரை அழைத்து, ''இவர்கள் என்னைத் தொந்தரவு செய்கிறார்கள். நீங்கள் உதவி செய்ய வேண்டும்'' என்றாள்.

அவர் போலீஸ்காரர்களைப் பார்த்து, ''என்ன சமாசாரம்?'' என்று விசாரித்தார். சாதாரண உடுப்பில் இருந்த போலீஸ்காரர், ''இந்த அம்மாள் இவருடைய பெட்டியைத் திருடியிருக்கிறாள். திருடியதோடு தன்னுடையது என்று சாதிக்கிறாள்!'' என்றான்.

ரயில்வே உத்தியோகஸ்தர் சீதாவைப் பார்த்து, ''இவர்கள் உன் பேரில் குற்றம் சாட்டுகிறார்கள், அம்மா! ரயில்வே போலீஸ் ஸ்டேஷன் அதோ பக்கத்தில் தான் இருக்கிறது. நீ அங்கே போய் இன்ஸ்பெக்டரிடம் உண்மையைச் சொல்லு. உனக்குக் கெடுதல் ஒன்றும் வராது. இவர்கள் சாட்டும் குற்றம் பொய் என்றால் இன்ஸ்பெக்டர் உன்னை விட்டுவிடுவார். அடுத்த வண்டியில் நானே உன்னை ஏற்றி விடுகிறேன்!'' என்றார். போகும்போது அவர், ''இந்தக் காலத்தில் யாரையும் நம்புவதற்கில்லை. பார்வைக்குப் பரம சாதுவாய்த் தோன்றுகிறார்கள். ஆனால் காரியம் நேர் விரோதமாயிருக்கிறது'' என்று சொல்லிக் கொண்டே போனார்.

வேறு வழியில்லையென்று கண்டு சீதா வண்டியை விட்டுக் கீழே இறங்கினாள். வெளிப்படையாகத் துணிச்சல் காட்டி, ''வாருங்கள்! உங்கள் இன்ஸ்பெக்டரிடமே சொல்கிறேன். இந்த அநியாயத்துக்குப் பரிகாரம் கேட்கிறேன்!'' என்றாள். முன்னும் பின்னும் போலீஸ் புடைசூழச் சென்றபோது சீதாவின் உள்ளம் பதைபதைத்தது. பயத்தினால் அவளுடைய கால்கள் தள்ளாடித் தத்தளித்தன. ஆனாலும் அவள் மனத்தில் ஒரு சிறு ஆறுதலும் தோன்றியது. நல்லவேளை! அந்தக் கொள்ளிக் கண் சாயபு இருந்த வண்டியிலிருந்து இறங்கித் தப்பித்துக் கொண்டோமல்லவா?

போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய் உண்மையைச் சொன்னால் இந்த அதிகப்பிரசங்கிகள் தன்னிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்ள வேண்டியதாகும். அடுத்த வண்டியில் ஏறிக் கொண்டால் போகிறது.

சாயபுவிடமிருந்து தப்பினோம் என்ற சந்தோஷமானது சீதாவைத் திரும்பிப் பார்த்து அதை உறுதி செய்துகொள்ளும்படி தூண்டியது. சீதா திரும்பிப் பார்த்தாள்.

ஆகா! இது என்ன? ஆபத்து இன்னமும் தன்னை விட்டபாடாக இல்லையே? அந்தச் சாயபுவும் ரயிலிலிருந்து இறங்கிச் சற்றுத் தூரத்தில் தொடர்ந்து வருகிறானே? ஐயோ! எதற்காக அவன் வருகிறான்? தன்னை என்ன செய்வதற்காக வருகிறான்?

## 22. விடுதலை

மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் சீதா திருட்டுக் குற்றம் சாட்டப்பட்டுக் கைதிக் கூண்டில் நின்றாள். அவளுடைய சித்தம் தன் சுவாதீனத்தை இழந்து பிரமை கொள்ளும் நிலைக்கு வந்திருந்தது.

அரண்மனைச் சிங்கார வனத்தில் நடந்த சம்பவங்களைக் காட்டிலும் நேற்றிலிருந்து நடந்த சம்பவங்கள் அவளுடைய சுயபுத்தியைக் கொண்டு நம்ப முடியாதனவாயிருந்தன.

முந்தாநாள் அவள் புராதனமான ராஜ குலத்தில் பிறந்த அரசிளங்குமரி தான் என்று கொஞ்ச நேரம் எண்ணிப் பெருமிதம் கொண்டிருந்தாள்.

இன்றைக்கு அவள் ரயில்வே ஸ்டேஷனில் பெட்டி திருடியதாகக் குற்றம்

இண்டேன் பாதுகாப்புத் தொடர்-1

# சமையல் எரிவாயுவைக் கட்டுப்படுத்தி வைத்துக்கொள்க!



திரவ வடிவாக்கிய பெட்ரோலியம் வாயுவை — குக்கிங் காஸ் என்கிறேமே அதனை — கட்டுப்படுத்தி வைத்துக்கொள்ளத் தவறினேமானால் பேராபத்து விளையும். இதைத் தவிர்ப்பது எப்படி? உபயோகத்திலில்லாத போது ஸிலிண்டர் வால்வையும், பர்னர் குமிழ்களையும் இறுக மூடியநிலையில் வைத்துக்கொள்வதே உறுதியான வழி.

உங்கள் வீட்டிலே தீ விபத்து நேருவதைத் தடுக்க வேண்டுமானால், செய்ய வேண்டியவை, செய்யக் கூடாதவை என்னென்ன என்பதற்கான முக்கிய விதிகள் இதோ:

**செய்ய வேண்டியவை** ■ உபயோகத்திலில்லாத போது ஸிலிண்டர் வால்வையும், பர்னர் குமிழ்களையும் மூடிய நிலையில் வைத்துக்கொள்க. ■ ரீஃபில் ஸிலிண்டரை இணைத்திடும் போது எல்லா நெருப்புக்களும் அணைக்கப்பட வேண்டும். ■ ஸிலிண்டரை இணைத்தான பின், ரெகுலேட்டர் ஜாயிண்டுகளின் இணைப்புறுதியை சோப்பு நீரினல் பரிசோதிக்கவும். ■ ஸிலிண்டர் வால்வுகளைத் திறக்க, கைத்திருகு சக்கரத்தை இடச்சுற்றாக அரைவட்ட அளவுக்கு இலேசான அழுத்தமுடன் திருப்பினால் போதும் ■ மூட்டுவதற்கெனக் குமிழைத் திருப்புமுன்னமே, பற்றவைத்த தீக்குச்சியை பர்னரில் காட்டவும் ■ ரீஃபில் இணைக்கப்படும் ஒவ்வொரு தடவையும் வளைகுழாயின் நிலையைப் பரிசீலித்துத் துப்புரவாக வைத்துக்கொள்க.

**கூடாதவை** ■ ஸிலிண்டரை படுக்க வைக்கக்கூடாது. ■ ஸிலிண்டரை நீங்களாகவே கழற்றவோ, கோக்கவோ கூடாது; வீடு மாற்றும் போதோ, கழற்றிக் கோக்கும் வேலையை உங்கள் வினியோகஸ்தரிடம் விடுங்கள். ■ ஸிலிண்டர் வால்வுகள், பிரஷர் ரெகுலேட்டர், பர்னர், எதனையும் நீங்களாகவே சரியமைக்கவே கூடாது. ■ ரெகுலேட்டரிலிருந்தோ, பர்னரிலிருந்தோ வளை குழாயை இழுக்கக் கூடாது. மீறினால் விபத்து நேரிடக் கூடும். ■ சூடேறும் இடத்தின் அருகே வளை குழாயை வைக்கக்கூடாது.

*விதி முறைக் குறிப்புக் கார்டை உங்கள் வினியோகஸ்தரிடமிருந்து பெற்றுக்கொண்டு, அதிலுள்ள விதிகளைக் கண்டிப்புடன் பின்பற்றவும்.*



**Indane** இண்டேன்—பாதுகாப்பிலே எந்த சமையல் எரிபொருளுக்கும் நிகர்

விற்பனைக்கு விடுப்போர்:

**இண்டியன் ஆயில் கார்ப்பொரேஷன் லிமிடெட்**




RIN
RIN



சாட்டப்பட்டு மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் நிறுத்தப்பட்டிருந்தாள்.

விசாரணை நடந்து கொண்டிருந்தது. பிராஸிக்யூஷன் தரப்பில் மூன்று நபர்கள் சாட்சிக் கூண்டில் ஏறிச் சாட்சி சொல்லி விட்டார்கள்.

மூன்று சாட்சிகளில் ஒருவன் அப்பெட்டியின் சொந்தக்காரன் என்று தன்னைச் சொல்லிக் கொண்டான்.

ஆக்ரா ஜங்ஷன் பிளாட்பாரத்தில் இருந்த ஒரு பெஞ்சியில் தான் பெட்டியுடன் உட்கார்ந்திருந்ததாகவும், தாகம் எடுத்து ஒரு கப் 'சா' குடிப்பதற்குப் போயிருந்ததாகவும், திரும்பி வந்து பார்க்கும்போது பெட்டியைக் காணோம் என்றும், அப்புறம் டெல்லி ரயிலில் இந்த அம்மாள் பெட்டியுடன் உட்கார்ந்திருப்பதைக் கண்டுபிடித்ததாகவும் அவன் சொன்னான். இந்தப் பெரும் பொய்யனுடைய பெயர் லாலா சத்தியப் பிரகாஷ் குப்தா என்று தெரிந்தபோது சீதாவால் தன் பயங்கர நிலைமையிலும் புன்னகை செய்யாமல் இருக்க முடியவில்லை.

இன்னொரு சாட்சி, மேற்படி லாலா சத்தியப் பிரகாஷினால் அழைத்து வரப்பட்ட போலீஸ் சேவகர். சத்தியப் பிரகாஷ் புகார் செய்ததின் பேரில் குற்றவாளி ஸ்திரீயை ரயிலிலிருந்து பெட்டி சகிதமாக இறக்கி ரயில்வே போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துப் போனதாக அவர் சாட்சி கூறினார்.

அடுத்தபடியாக மேற்படி போலீஸ் ஸ்டேஷனில் அச்சமயம் இருந்த போலீஸ் இன்ஸ்பெக்டர் சாட்சியம் கூறினார். "இந்த அம்மாள் பெட்டி திருடியிருப்பாள் என்பதை முதலில் நான் நம்பவில்லை. ஆனால் சத்தியப் பிரகாஷ் வற்புறுத்திச் சொன்னதின் பேரில் இந்த ஸ்திரீயிடம் 'பெட்டி உன்னுடையதுதானே? அப்படியானால் அதில் என்ன சாமான்கள் இருக்கின்றன?' என்று கேட்டேன். இந்த ஸ்திரீ பதில் ஒன்றும் சொல்லாமல் திகைத்து நின்றாள். ஆனால் சத்தியப் பிரகாஷ் குப்தா பெட்டியில் இருக்கும் சாமான்களுக்கு ஜாபிதா கொடுத்தான். சாவியும் அவனிடம்தான் இருந்தது. திறந்து பார்த்தால் அவன் சொன்ன சாமான்கள் எல்லாம் இருந்தன. இந்த அம்மாள் தன்னைப் பற்றி வேறு தகவல்களும் சரியாகக் கொடுக்கவில்லை. விலாசம் சொல்லக்கூட மறுத்துவிட்டாள். ஆகையால் என்னுடைய முதல் எண்ணத்தை மாற்றிக் கொண்டு வழக்குப் பதிவு செய்தேன்" என்று இன்ஸ்பெக்டர் சாட்சி சொன்னார்.

இதையெல்லாம் சீதா கேட்டுக் கொண்டிருந்தாள். அந்த இன்ஸ்பெக்டர் கூறியதெல்லாம் உண்மைதான். பெட்டியில் என்ன இருந்தது என்பது தனக்கு உண்மையில் தெரியாது; ஆகையால் சொல்ல முடியாமல் திகைக்க நேர்ந்தது. தன்னுடைய சொந்த விலாசத்தைக் கொடுக்கவும் அவளுக்கு இஷ்டமில்லை. இந்த அவமானம் வேறு அவருக்கு வரவேண்டுமா என்றுதான் சொல்லவில்லை. தான் குற்றமற்றவள், நிரபராதி. இதை எப்படியும் நிரூபித்து விடலாம். நிரூபித்து விடுதலை பெறுவது நிச்சயம். பின் எதற்காகத் தன் கணவரை இந்த வெட்கக்கேட்டில் சம்பந்தப்படுத்த வேண்டும்?



''சபாகாரியதரிசி உம்மைப் பெரிய உபகாரின்னு புகழ்கிறாரே; அப்படி என்னதான் உபகாரம் செய்தீர்கள் ?''

''சபாவில் பாடணும்னு இதுவரையில் நான் அவரிடம் 'சான்ஸ்' கேட்கவில்லே!''

ஆனால் எப்படி நிரூபிப்பது? தான் குற்றமற்றவள் என்பதை எவ்விதம் நிரூபிப்பது? அதற்கு வழி எவ்வளவு யோசித்தும் புலப்படவில்லை. தன்னுடைய கதையை யார் நம்புவார்கள்?

அந்தக் கோர்ட்டிலிருந்த வயோதிகரான வக்கீல் ஒருவர் சீதாவின் பேரில் கருணை கொண்டு அவளுடைய கட்சியை எடுத்துப் பேசுவதற்கு ஒப்புக் கொண்டார். தம்மிடம் உண்மையைச் சொல்லும்படி சீதாவைக் கேட்டார். சீதா உண்மையில் நடந்ததையெல்லாம் சொன்னாள். ஆனால் அவர் ஒரேயடியாகத் தலையசைத்தார். ''கதை ஜோடிக்கும் சாமர்த்தியம் உன்னிடம் அபாரமாயிருக்கிறது. எழுதும் சக்தியும் இருந்தால் பிரபல ஆசிரியை ஆகலாம். ஆனால் கோர்ட்டில் இந்தக் கதையை யாரும் நம்ப மாட்டார்கள். நீ உண்மையைச் சொல்ல மறுக்கிறாய். நான் என்ன செய்யட்டும்? முடிந்தவரையில் முயன்று பார்க்கிறேன்'' என்றார். அவ்வாறே அவரால் முடிந்த வரையில் முதல் மூன்று சாட்சிகளையும் குறுக்கு விசாரணை செய்து பார்த்தார். ஆனால் ஒன்றும் பயன் தரவில்லை. குற்றவாளிக்குச் சாதகமாக அந்தச் சாட்சிகளின் வாய்மொழியிலிருந்து எதுவும் வெளியாகவில்லை.

முதல் மூன்று சாட்சிகளின் விசாரணை முடிந்துவிட்டது. பிராஸிக்யூஷன் தரப்பில் இன்னும் ஒரே ஒரு சாட்சி பாக்கி இருந்தது.

ஆனால் மாஜிஸ்டிரேட் அவசரப்பட்டார். ''இன்னும் எதற்காகச் சாட்சியம்? கேஸ் தெளிவாக இருக்கிறதே!'' என்று சொன்னார்.

பிராஸிக்யூஷன் தரப்பில் கேஸ் நடத்திய போலீஸ் வக்கீல், ''கொஞ்சம் பொறுத்துக் கொள்ள வேண்டும். நாலாவது சாட்சி இருட்டைக் கண்ணால் பார்த்த சாட்சி'' என்றார்.

உடனே, அந்தக் கிராதக சாயபு சாட்சிக் கூண்டுக்கு வந்து நின்றான்.

சீதாவின் பயமெல்லாம் உண்மையாகி விட்டது. 'இவன் எதற்காகத் தொடர்ந்து வருகிறான்?' என்று முதல் நாள் இரவு சீதா கேட்டுக் கொண்ட கேள்விக்குப் பதில் கிடைத்துவிட்டது. தன் குடியைக் கெடுப்பதற்குத்தான்; பொய்ச் சாட்சி சொல்லித் தன்னைத் திருடி என்று நிரூபிப்பதற்குத்தான்! 'அட பாவி! உனக்கு நான் என்ன தீங்கு செய்தேன்? நீ யார் என்பதுகூட எனக்குத் தெரியாதே! எதிர்பாராத எத்தனையோ கஷ்டங்களுக்கு உள்ளான இந்தத் துர்ப்பாக்கியசாலியின் தலையில் இப்படிக் கடைசியாகப் பெரிய கல்லைத் தூக்கிப் போட்டுக் கொல்லப் பார்க்கிறாயே?'

அந்தக் கிராதக சாயபு, ''சர்வ வல்லமையுள்ள ஆண்டவன் சாட்சியாக உண்மையே சொல்லுவேன்'' என்று சத்தியப் பிரமாணம் செய்தார். பிறகு போலீஸ் தரப்பு வக்கீலின் கேள்விகளுக்குப் பதில் சொன்னார். இரண்டாவது மூன்றாவது கேள்விகளுக்கு அவர் கூறிய பதில்கள் கோர்ட்டில் பெரும் கிளர்ச்சியை உண்டாக்கிவிட்டன.

''இந்த ஸ்திரீ பெட்டியைத் திருடி எடுத்துச் சென்றதை நீர் கண்ணால் பார்த்தீர் அல்லவா?''

''இல்லை; நான் பார்க்கவில்லை.''

''ஓகோ! இது என்ன? நீர் பார்க்கவில்லையென்றால், பின்னே இவள் திருடினாள் என்பது உமக்கு எப்படித் தெரியும்? அப்படி அனுமானிப்பதற்கு வேறு காரணம் உண்டா?''

''இல்லை; அப்படி அனுமானிப்பதற்கு எவ்விதமான காரணமும் இல்லை! இந்த அம்மாள் பெட்டியைத் திருடவில்லை என்பது எனக்கு நிச்சயமாய்த் தெரியும்!''

தன் காதில் விழுவது உண்மைதானா என்று சீதா அதிசயித்தாள்.

லாலா சத்தியப் பிரகாஷ் குப்தாவின் முகம் வெளுத்தது.

போலீஸ்காரர்கள் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்தார்கள்.

மாஜிஸ்டிரேட் கவனமாகக் காது கொடுத்துக் கேட்கத் தொடங்கினார்.

சீதாவின் கட்சி பேசிய வக்கீலின் முகம் பிரகாசம் அடைந்து மலர்ந்தது.

போலீஸ் வக்கில் போலீஸ் அதிகாரியுடன் ஏதோ பேசிவிட்டு, ''இந்தச் சாட்சி விரோதமாய்த் திரும்பிவிட்டபடியால் விசாரணையை நிறுத்திக் கொள்கிறேன்'' என்றார்.

நீங்கள் 1972 ஜனவரி முதல் தேதிக்கு பின்-அல்லது
1972 டிசம்பர் 31-தேதிக்கு முன்

# திருமணமான-திருமணமாகப்போகும் தம்பதிகளா!?

## வாங்கிடுவீர் *கில்லிக்ஸ்* பிரஷர் குக்கர்!
## வென்றிடுவீர் இனிய பல பரிசுகளை!

**பிரபல நட்சத்திர தம்பதிகள் திரு ரவிச்சந்திரன் திருமதி ஷீலா பரிசுகளை வழங்குவர்!**




அருள் & கோ – தினமணி கதிர்
இணைந்து நடத்தும் தித்திக்கும்



# புதுமைப் பரிசுத் திட்டம்

**நீங்கள் செய்ய வேண்டியது!**
- ரூபாய் 35/- முன்பணமாகச் செலுத்தி புகழ்பெற்ற *கில்லிக்ஸ்* பிரஷர்குக்கரை அருள் அண் கோ.வில் வாங்குங்கள்.
- மீதியை, முழு விலையும் கொடுத்தோ, அல்லது சுலபத் தவணைகளிலோ செலுத்தலாம்.

**இலவசத் தேன்நிலவு**
ஊட்டி அல்லது கொடைக்கானல் சென்றுவர ஒரு தம்பதிக்கு இலவச ரயில் டிக்கெட். ஒருவாரம் தங்க வசதிகள். மதிப்பு ரூபாய் ஆயிரம்

**இலவசப் படக்காட்சி**
ஐந்து இளம் தம்பதிகளுக்கு அவர்கள் வசிக்கும் ஊரிலுள்ள ஒரு தியேட்டரில் வெளியிடப்படும் படங்கள் ஒவ்வொன்றுக்கும் தலா இரண்டு, முதல் வகுப்பு டிக்கட்டுகள். ஓராண்டு முழுமைக்கும்.

**தினமணி கதிர்**
நூறு இளம் தம்பதிகளுக்கு ஓராண்டுகாலம் முழுவதற்கும் தினமணி கதிர் வார இதழ் இலவசமாக அனுப்பிவைக்கப்படும்.




**நிபந்தனைகள்**
- ஒவ்வொரு *கில்லிக்ஸ்* பிரஷர் குக்கருடனும் விசேஷ பரிசுக்கூப்பன் தரப்படும்.
- *கில்லிக்ஸ்* பிரஷர் குக்கர் பல மாடல்களில் கிடைக்கும். விலைப்பட்டியல் வேண்டுவோருக்கு இலவசமாக அனுப்பி வைக்கப்படும்.

- சென்னை, செங்கல்பட்டு, தென்.வட.ஆற்காடு, சேலம், ஈரோடு, தர்மபுரி, தஞ்சை மாவட்டங்களைச் சேர்ந்தவர்கள் அந்தந்த மாவட்டத்திலிருக்கும் கிளைகளின் மூலம் எமது தவணைகளில் பெறலாம்.

**நூற்றுக்கு மேற்பட்ட பரிசுகள்**

**முடிவு தேதி: 31-12-1972**

அருள் அண்ட் கோ.வின் கிளைகளில்லாத மற்ற மாவட்டத்தினர் எமது கிளைகளுக்கு டிராப்ட் அல்லது மணியார்டர் மூலம் முழுத்தொகையும் அனுப்பினால், இலவசத் தபால் செலவில் குக்கர் பரிசுக் கூப்பனுடன் அனுப்பி வைக்கப்படும்.

பரிசு பெற்றவர்களின் பெயர்கள் ஜனவரி மாதத்தில் தினமணி கதிர் மற்றும் பிரபல பத்திரிகைகளில் வெளியிடப்படும். போட்டி சம்பந்தமாக 'நடுவர் குழு' எடுக்கும் முடிவுகளே இறுதியானவை!

# அருள் & கோ

தலைமை அலுவலகம்: 45, ஜோன்ஸ் ரோடு, சைதாப்பேட்டை, சென்னை-15. போன்: 441524, 446175

**கிளைகள்:**

| | | | |
|---|---|---|---|
| 70, திருச்சி மெயின்ரோடு, சேலம்-1. போன்: 5033, 5516 | 60, நேதாஜி ரோடு, விழுப்புரம். போன்: 238. | 15, டவுன் ஹால் ரோடு, கும்பகோணம். போன்: 938 | 70, சிவசண்முகம் பிள்ளை தெரு, 'ஜெனரி பில்டிங்ஸ்' ஈரோடு-1. |

● *கில்லிக்ஸ்* பிரஷர் குக்கர் வாங்கிடுவீர்! ● கீர்த்தியுடன் பரிசுகளைப் பெற்றிடுவீர்!

# இழுதிறன் கொண்ட உறுதி!

எப்பொருளையும் கட்டி வைக்க
என்றும் பயன்படுத்துங்கள்..
ஆந்திரப் பிரதேஷ்
பேப்பர் மில்ஸ் காகிதம்...
அதன் உறுதியான கட்டமைப்பு,
உங்கள் பொருளைப்
பத்திரமாகப் பாதுகாக்கிறது.



**ஆந்திரப் பிரதேஷ் பேப்பர்**
(வெஸ்ட் கோஸ்ட் பேப்பர் கம்பெனியுடன
தொழில்நுட்பக் கூட்டுறவு கொண்டது).
ரிஜிஸ்டர்ட் அலுவலகம் & மில்ஸ்: ராஜமுந்திரி (ஆ.பி.)
பம்பாய் அலுவலகம்: ஸ்ரீநிவாஸ் ஹவுஸ், ஹஸாரிமால் சோமானி மார்க்.
ஹைதராபாத் அலுவலகம்: 1-2-33/2, மதுபன், ககன் மஹல் ரோடு.

mcm/app/9 tam

குற்றவாளித் தரப்பு வக்கீல் குதித்து எழுந்து, ''நான் சில கேள்விகள் கேட்கக் கோர்ட்டார் அனுமதி கொடுக்க வேண்டும்'' என்றார்.

மாஜிஸ்டிரேட்டுக்கும் உண்மையை அறியும் ஆர்வம் ஏற்பட்டிருந்தது. அதனால் அவர் கேள்வி கேட்க அனுமதித்தார்.

''ஜனப்! இந்த ஸ்திரீ திருடவில்லை என்று நிச்சயமாய்த் தெரியும் என்று சொன்னீரே ? நிச்சயமாய் எப்படித் தெரியும் ?''

''உண்மையில் பெட்டியைத் திருடியது யார் என்று எனக்கு நிச்சயமாய்த் தெரியும். அதனால்தான் இந்த அம்மாள் திருடவில்லை என்று நிச்சயமாய்ச் சொன்னேன்.''

கோர்ட்டில் பரபரப்பு அதிகமாயிற்று. கசுமுசுவென்று பேசும் சத்தம் எழுந்து உடனே அடங்கிவிட்டது.

''உண்மையில் பெட்டியைத் திருடியது யார்?'' என்று வக்கீல் கேட்டார்.

முகம்மதியர் பதில் சொல்லத் தயங்கினார்.

''சத்தியப் பிரகாஷ் குப்தாவா ?''

''இல்லை !''

''பின்னே யார் ?''

''நான்தான் !''

''என்ன? நன்றாய்ச் சொல்லும். கோர்ட்டாரின் பக்கம் பார்த்துச் சத்தியமாய்ச் சொல்லும்.''

''பெட்டியைத் திருடியவன் நான் தான். பெட்டியை எடுத்துப் போய் முதலில் ஒரு வண்டியில் ஏறிக் கொண்டேன். அதே வண்டியில் பிற்பாடு அந்த அம்மாள் வந்து ஏறினாள். நான் திருடி வந்த பெட்டிக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டாள்....''

இந்தச் சமயத்தில் போலீஸ் வக்கீல் மேற்படி சாட்சியத்தை ஆட்சேபிக்க எழுந்தார். மாஜிஸ்டிரேட் அவரை உட்காரும்படி உத்தரவிட்டார்.

''போலீஸாரிடம் நேற்று இரவு நீர் எழுதி வைத்த வாக்குமூலத்தில் இந்த அம்மாள் திருடியதைக் கண்ணால் பார்த்ததாக எழுதி வைத்தீர் அல்லவா! அது ஏன்?''

''சத்தியப்பிரகாஷ் குப்தா அவ்விதம் சொல்லும்படி கேட்டுக் கொண்டான். சொன்னால் ஐந்நூறு ரூபாய் தருவதாகவும் ஒப்புக் கொண்டான்.''

''பின் எதனால் இப்போது மாறி உண்மையைச் சொன்னீர் ?''

''இந்தச் சாட்சிக் கூண்டில் ஏறி அல்லாவின் பெயரால் பிரமாணம் எடுத்துக் கொண்ட பிறகு பொய் சொல்ல மனம் துணியவில்லை. இந்த அம்மாளுக்குச் செய்த அநீதிக்குப் பரிகாரமாக உண்மையைச் சொன்னேன்.''

''ஆனால் இந்த ஸ்திரீ பெட்டி தன்னுடையது என்று போலீஸாரிடம் சொன்னாளே, அது ஏன்?''

''இந்த அம்மாள் போலீஸாரிடம் என்ன சொன்னாளோ, எனக்கு அது தெரியாது. இந்த அம்மாளைப் பார்த்தாலே ஒரு மாதிரி பிரமை பிடித்திருக்கிறது என்று தெரிகிறது. பிரமையில் அவள் ஏதாவது சொல்லியிருக்கலாம்.''

சீதாவின் வக்கீல் சுருக்கமாகத் தம் முடைய வாதத்தைச் சில வார்த்தைகளில் முடித்துக் கொண்டார்.

மாஜிஸ்டிரேட் வழக்கைத் தள்ளுபடி செய்துவிட்டு, சீதாவின் கட்சி




பேசிய வக்கீலைப் பார்த்து, ''இந்த ஸ்திரீயின் பாதுகாப்புக்கு ஏதாவது ஏற்பாடு செய்ய வேண்டும். இவள் யார், எந்த ஊர் என்பதைக் கண்டுபிடித்து இவளுடைய சொந்தக்கார மனுஷர்களிடம் சேர்ப்பிக்க வேண்டும். அது வரையில் இந்த நகரில் உள்ள அநாதை ஆசிரமத்திலாவது வேறு தகுந்த ஸ்தாபனத்திலாவது இவளை விட்டு வைப்பது நல்லது'' என்றார்.

''ஆகட்டும்'' என்றார் வக்கீல்.

* * *

முதிய பிராயத்தவரும் உத்தமருமான அந்த வக்கீல் சீதாவுக்குச் சித்தப்பிரமை இல்லையென்றும், பல காரணங்களினால் மனம் குழம்பியிருந்தாலும் தன்னுடைய நிலைமையைப் பற்றி யுக்தா யுக்தம் பார்த்துத் தீர்மானிக்கும் தெளிந்த அறிவு அவளிடம் இருக்கிறது



**''ஓய்! உம்மைப் பின் பாட்டு பாடத் தான் கூப்பிட்டுக் கொண்டு வந்தேன். பக்க வாத்தியக்காரர்களைப் பாராட்டி அவ்வப்போது பேஷ்! பிரமாதம்! என்று நான்தான் சொல்லுவேன், தெரிஞ்சுதா?''**

என்றும் விரைவிலேயே அறிந்தார். அன்று பிற்பகலில் தம்முடைய வீட்டுக்கு அழைத்துப் போய் உணவு அருந்துவித்தார். இரவில் ஆக்ரா ஸ்டேஷனுக்கு அழைத்துப் போனார். வழியில் அவர், ''அம்மா! சாட்சி சொன்ன சாயபுவை உனக்கு முன்னமே தெரியுமா?'' என்று கேட்டார்.

''தெரியாது. அவர் எங்கே இப்போது? நான் பார்த்து நன்றி கூற வேண்டும்!'' என்றாள்.

''அதெல்லாம் ஒன்று வேண்டாம், மகளே! நான் ஒரு விஷயம் சொல்லுகிறேன், கேட்கிறாயா?''

''அவசியம் கேட்கிறேன், ஐயா! அவ்வளவு நன்றியாவது தங்களிடம் எனக்கு இருக்க வேண்டாமா?''

''நல்லது, கேள்! கடவுளின் அருள் உன்னை இன்று காப்பாற்றியது. அந்த முகம்மதியனின் சாட்சியந்தான் உன்னுடைய விடுதலைக்குக் காரணமாயிருந்தது என்பது உண்மைதான். ஆனால் அவனை யோக்கியன் என்று நான் கருதவில்லை. ஏதோ நோக்கம் வைத்துக் கொண்டுதான் அவன் தான் திருடியதாகச் சொல்லி உன்னை விடுதலை செய்திருக்கிறான். நீ சர்வ ஜாக்கிரதையாயிருக்க வேண்டும். இதைக் காட்டிலும் பெரிய ஆபத்து உனக்கு வரக் கூடும்.''

''இன்றைக்கு என்னைக் காப்பாற்றிய கருணாமூர்த்தியான கடவுள் இனியும் காப்பாற்ற மாட்டாரா?''

''காப்பாற்றுவார்; காப்பாற்றட்டும். ஆனால் நாமும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். அந்தச் சாயபு, பெட்டி திருடவில்லை என்பது நிச்சயம். உனக்கு யாரோ பெட்டியைக் கொடுத்ததாகச் சொன்னாயே, அதை நான் நம்புகிறேன். பின் எதற்காக அந்த முகம்மதியன் திருட்டுக் குற்றத்துக்குத் தன்னை ஆளாக்கிக் கொண்டு உன்னை விடுதலை செய்விக்கிறான்?''

''ஐயா! அந்த முகம்மதியர் இப்போது எங்கே? ஒரு வேளை அவரைக் கைது செய்து விட்டார்களோ?''

''ஒரு வேளை என்ன? திருட்டுக் குற்றத்தைக் கோர்ட்டில் ஒப்புக் கொண்ட ஆசாமியைச் சும்மா விட்டுவிடுவார்களா!''

''ஐயா! தாங்கள் அவரைப் பார்த்து ஏதாவது உதவி செய்ய வேண்டும். உங்களுக்குப் புண்ணியம் உண்டு.''

''என்னால் ஆனதைச் செய்கிறேன். சற்று முன்னால் அவனைப் போய்ப் பார்த்துவிட்டுத்தான் வந்தேன். அவன் தன்னைப் பற்றி ஒன்றும் பேசவில்லை. உன்னைப் பற்றியே பேசினான். உன்னை எப்படியாவது பத்திரமாய் டில்லிக்கு அனுப்பிவிட வேண்டுமாம். அங்கே உள்ளவர்கள் உன்னைக் கவனித்துக் கொள்வார்களாம். மகளே! என்னுடைய புத்திமதியைக் கேட்பாயா?''

''சொல்லுங்கள், ஐயா!''

''என் அபிப்பிராயத்தில், நீ இப்போது டில்லிக்கே போகக் கூடாது. அங்கே யாரோ உன்னை ஏதோ செய்யக் காத்திருக்கிறார்கள் என்று நினைக்கிறேன். வேறு எங்கேயாவது போவது நல்லது. நீ மதராஸ்காரிதானே?... மதராஸுக்கே போகலாமே?''

''இல்லை, ஐயா! மதராஸுக்கு இப்போது போக நான் இஷ்டப்படவில்லை.''

''டில்லிக்குத்தான் போக வேண்டும் என்று பிடிவாதம் பிடித்தால்.....''

''இல்லை; டில்லிக்குப் போகவும் எனக்குப் பயமாகத்தான் இருக்கிறது. கல்கத்தாவில் எனக்கு ரொம்ப வேண்டிய சிநேகிதர்கள் இருக்கிறார்கள். ஆகையால் கல்கத்தா போகலாம் என்று பார்க்கிறேன். டிக்கட்டுக்குத்தான் பணம் வேண்டும்.''

''அதைப் பற்றி நீ கவலைப்படாதே! நான் டிக்கெட் வாங்கித் தருகிறேன். யாராவது தெரிந்தவர்கள் கல்கத்தாவுக்குப் போனாலும் போவார்கள். அவர்களிடம் உன்னை ஒப்புவித்து அனுப்பி வைக்கிறேன். சரிதானே?''

''அப்படியே ஆகட்டும்; எனக்கு நல்ல காலம் பிறக்கும் போது நீங்கள் கொடுக்கும் பணத்தைத் திருப்பி அனுப்பி விடுகிறேன்.''

''பணத்தைப் பற்றி யார் கேட்டார்கள்? சௌக்கியமாகப் போய்ச் சேர்ந்தால் எனக்குப் பரம திருப்தி!'' என்றார் வக்கீல்.

(தொடரும்)

# ஜாங்கோ ஜங்கு

கதை: குட்டி கிருஷ்ணன்

சித்திரம்: ராஜு

12




































பக்கத்து மேஜையில் அமர்ந்து இந்த உரையாடலைக் கேட்டுக் கொண்டிருந்தார் சி.ஐ.டி அனந்தாச்சாரி!

தொடரும்




ராஜா ஒரு லாரி டிரைவர்; குடி போதையில் ஒருவன் மீது லாரியை ஏற்றிக் கொன்று விடுகிறான். அவனுக்கு இரண்டு வருஷச் சிறைவாசம் தண்டனையாக விதிக்கப்படுகிறது. மனித இதயமும், சீர்திருத்த நோக்கமுங் கொண்ட நீதிபதி அந்தத் தண்டனையைச் சிறிது மாற்றி, 'லாரி விபத்தினால் பாதிக்கப்பட்ட குடும்பத்தைக் குற்றவாளி தன் உழைப்பினால் காப்பாற்ற வேண்டும்; அவர்களுடனேயே தன் தண்டனைக் காலம் முழுவதும் தங்கியிருக்க வேண்டும்' என்று தீர்ப்புக் கூறுகிறார். மேற்படி தீர்ப்பினால் திரைக் கதைப் பாத்திரங்களிடையே எத்தனை மாறுபட்ட மனோபாவங்களைக் காண முடிகிறது என்பதுதான் படத்தின் சுவையான அம்சம்.

கதாநாயகன் ராஜாவுக்கு அந்த விபத்து ஒரு சவாலாக அமைந்து விடுகிறது. அதன் மூலம்—காதல், மோதல், வெறுப்பு, எதிர்ப்பு, பாசம், பந்தம், சொந்தம், பண்பு, நட்பு முதலிய பல்வேறு உணர்ச்சிகளுடன் மோத வாய்ப்புக் கிடைக்கிறது. சிவாஜி கணேசன் தம் இணையற்ற நடிப்புத் திறமையினால் பொன்மலருக்கு நறுமணம் சேர்த்ததுபோல் அந்தப் பாத்திரத்துக்கே அமரத்துவம் அளித்து விடுகிறார். அநாதையான ராஜாவின் இதயம் அன்பினால் மலர்வதையும், பாசத்தினால் பொங்குவதையும், வேதனையினால் வெந்து போவதையும், கோபத்தினால் குமுறுவதையும், காதலினால் கனிவதையும் சிவாஜி அநாயாசமாக வெளிப்படுத்துகிறார்.

நீதிபதியாக வரும் சுந்தரராஜன் பாத்திரத்துக்கேற்ற கம்பீரத்துடன் நன்றாக நடித்திருக்கிறார். லாரி விபத்தில் மகனை இழந்த தந்தையாக வரும் எஸ். வி. சுப்பையா நொண்டிப் பாத்திரமானாலும் நடிப்பில் நிறைவைத் தருகிறார். கண்ணிழந்த தாயாக வரும் காந்திமதி தம்மால் நல்ல பாத்திரத்தையும் ஏற்று நடிக்க முடியும் என்பதை நிரூபிக்கிறார்.

லாரி விபத்தில் உயிரிழந்தவனின் மனைவி படத்தில் முக்கியமான பாத்திரம்; சௌகார் ஜானகி அதை ஏற்பதற்குத் தம்மிடம் தகுதி இருக்கிறது என்பதை நன்கு வெளிப்படுத்திப் பாராட்டைப் பெறுகிறார்.

துடிப்பாகப் பேசித் தம் நடிப்பில் நிறைவைக் காட்டும் மனோரமாவுக்குப் பெருமூச் செறிந்து ஏங்கவும் சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. ஈஸ்ட்மென் கலரில் படம் அருமையாய்த் தயாரிக்கப்பட்டிருக்கிறது. ஒளிப்பதிவு ரசிகர்களின் பாராட்டைப் பெறுகிறது.

சி. வி. ராஜேந்திரன் படத்தைத் திறமையாக டைரக்ட் செய்திருக்கிறார்.

ஜயலலிதா அநாதைப் பெண் ராதாவாக வந்து பயாஸ்கோப் படம் காட்டி, தெருவில் ஆடிப் பாடி, கவர்ச்சியாகத் தோன்றிப் படத்துக்குச் சுவையூட்டியிருக்கிறார்.

மொத்தத்தில் பெருமிதம் கொள்ளும்படி அமைந்திருக்கும் சுஜாதாவின் ''நீதி'' ஹிந்தியில் வெளிவந்த ''துஷ்மன்'' படத்தின் தமிழாக்கம்தான் என்பதை நினைக்கும்போது சற்று வேதனையைத் தருகிறது. காட்சிக்குக் காட்சி அந்தப் படத்தைப் பின்பற்றியிருப்பதால், நம் பாராட்டில் பாதி மூலப் படத்துக்குப் போய்விடுகிறதே! இதைச் சற்றுச் சிந்தித்துப் பார்த்து, முழுப் பெருமிதமும் நமக்கே கிடைக்கிற மாதிரி 'ஒரிஜினல்' படங்கள் வெளிவரும் நன்னாளை ஆவலோடு எதிர்பார்க்கிறேன்.

—காந்தன்

## அன்றும் இன்றும் சிலருக்கு அதே இளந்தளிர் மேனி!

**பியர்ஸ் சருமக் களை ... கன்னிப் பருவக் களை**




இப்போது அழகுகளின அட்டைப் பெட்டியிலே கிடைக்கிறது
சென்னை நகரிலும், திருவனந்தபுரத்திலும், கோழிக்கோட்டிலும் மட்டுமே.

லின்டாஸ்-PS. 24 CP-140 TM.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

# ராஜாஜியின் ஜெயில் டைரி

**1922 ஜனவரி, 15உ.**

ஞாயிறு. கோவை திரு என். எஸ். ராமசாமி ஐயங்கார் மீது தொடுக்கப் பட்டிருந்த ராஜத் துரோக வழக்கில் அவர் வெகு கேவலமாக மன்னிப்புக்



கேட்டுக் கொண்டார் என்றும், இன்னும் ஒரு வருஷ காலத்துக்கு அரசியலில் கலந்து கொள்வதில்லை என்று எழுதிக் கொடுத்து விடுதலை பெற்று விட்டார் என்றும் நேற்று வந்த செய்தி எனக்கு அருவருப்பா யிருந்தது. அவருடைய தேசபக்தி என்ன, அவர் இதுவரையில் செய்து வந்த சேவை என்ன, இப்பொழுது இவ்வளவு கேவலமாக அடி பணிந்து விட்டாரே, அது எப்படிச் சாத்தியமாயிற்று என்பதை என்னால் எண்ணிப் பார்க்க முடியவில்லை. இதைக் கேட்டபின் எதைத்தான் நடக்க முடியாத காரியம் என்று ஒதுக்கி வைப்பது என்று எண்ணலானேன். இத்தகைய பலவீனத்தினின்றும் நம்மைக் காக்குமாறும், தேசபக்தர்க்குரிய மனோ தைரியத்தை அளிக்குமாறும் இறைவனைப் பிரார்த்திக்கின்றேன்.

வாழ்வுக்கு இன்றியமையாமல் வேண்டப்படுவன சொற்பமே. அவை சில நாட்கள் கிடைக்காத பொழுது தான் நாம் அத்தகைய எளிய வாழ்வின் உண்மையான அழகையும் இன்பத்தையும் துய்க்க முடிகின்றன. இந்தக் காலத்தில் இவற்றைத்தான் துய்ப்பது என்ற வரையறை இல்லை. அதனால் எளிய வாழ்க்கைக்குரிய பொருள்களை இன்பகரமாகத் துய்க்கக் கூடிய ஆற்றலை இழந்து விட்டோம். மேன்மேலும் ஆடம்பரப் பொருள்களையே நாடுகின்றோம். இவைகளையெல்லாம் அடைந்தாலும் அதனால் திருப்தி உண்டாகி விடுவதில்லை. ஆதலால் இடையில் சிறிது காலம் எளிய பொருள்கள் கூடக் கிடைக்காதபடி நேர்ந்தால் அது நம்முடைய உடலுக்கும் உள்ளத்துக்கும் உரம் அளிக்கும்; இன்றியமையாத எளிய பொருள்களை இன்பமாகத் துய்ப்பதற்கு வேண்டிய மனோபாவத்தை உண்டாக்கித் தரும். இன்று காலையில் என்னுடைய அறை திறக்கப்பட்டதும் நான் காற்றையும் ஒளியையும் அனுபவித்த மாதிரி இதற்கு முன் என்றுமே அனுபவித்ததில்லை. இப்பொழுது சிறைக்கு வந்த பின் எளிய உணவுகளிலுள்ள அழகிய சுவையை அறிந்தது போல் இதற்கு முன் ஒரு காலத்திலும் அறிந்ததில்லை; இடையிடையே பட்டினி இருக்க நேர்ந்தால் சிலர் அதைப் பெரிய துரதிர்ஷ்டமாக எண்ணுகின்றனர். ஆனால் அது தவறு. அது போலவேதான் சிறைவாசத்தைக் கண்டு அளவுக்கு மிஞ்சி அஞ்சுவதும் தவறாகும்.

சாதாரணமாக ஜனங்கள் ஞாயிற்றுக் கிழமையும் இதர விடுமுறை நாட்களும் வந்தால் அந்த நாளை மகிழ்ச்சியுடன் வரவேற்பார்கள். ஆனால் சிறையிலுள்ள



எங்களுக்கோ அத்தகைய நாட்கள் வந்தால் சந்தோஷமே கிடையாது. சிறை அதிகாரிகளும் சாதாரண நாட்களில் போவதைவிட முந்தியே வீட்டுக்குப் போய் விடுவார்கள். அதனால் சீக்கிரம் சீக்கிரமாகச் சாப்பிடும்படியும் தட்டுக்களைக் கழுவி வைக்கும்படியும் கூறுவார்கள். சிறிது சிந்தனை சக்தியை உபயோகிப்பதானால் நாம் இதையெல்லாம் சந்தோஷமாகவே வரவேற்க வேண்டும். ஐயோ, பாவம் அவர்களும் மனிதர்கள் தானே ? இன்றைக்கேனும் அவர்கள் சீக்கிரமாக நம்மைப் பூட்டி வைத்து விட்டுத் தங்கள் மனைவி மக்களுடன் சந்தோஷமாகக் காலம் கழிக்கட்டும் என்று எண்ண வேண்டும். சிறைக் காவல்காரருடைய வாழ்வு கைதியின் வாழ்வைவிடச் சிறிதுகூட மேலானது அன்று. கைதிக்கு உணவு சும்மா கிடைக்கிறது. காவல்காரருக்கோ சம்பளம் சும்மா கிடைப்பதில்லை. அதிகாரிகளுக்கு அஞ்சி நடப்பதில் அவர்களுடைய நிலைமையும் கைதிகளுடைய நிலைமையும் ஒன்றுதான். மொத்தத்தில் அவர்களுடைய வாழ்வு சுகமில்லாத வாழ்வேயாகும். அதனால்தான் அவர்கள் தங்களை அறியாமலே ஒன்றுமறியாத கைதிகளிடம் மிருகத்தனமாக நடந்து தங்கள் கோபத்தை ஒருவிதமாய்த் தீர்த்துக் கொள்கிறார்கள்.

''மாதம் முப்பது ரூபாய் கொடுங்கள் போதும்; நாங்கள் சந்தோஷமாய் இருப்போம். காந்திஜி கொடுத்தாலும் சரிதான், சர்க்கார் கொடுத்தாலும் சரிதான். யார் கொடுத்தாலும் எங்களுக்கு அது போதும். காந்தி மகான் கொடுப்பதாயிருந்தால் கொஞ்சம் குறைத்து வேணுமானாலும் வாங்கிக் கொள்வோம்.'' இதுதான் அவர்களுடைய வேண்டுகோள் ஆகும்.

**வை**த்தியசாலை நிறைய மூட்டைப் பூச்சி. அதனால் அதை நரகம் என்றே கூறலாம். எல்லாப் பகுதிகளிலும் இப்படித்தான் என்று கூறுகிறார்கள். அறைகளில் மூட்டைப் பூச்சிகளுடன் சிலப் பேனும் சிறு வண்டுகளும் அதிகம். கைதிகளுடைய போர்வைகளும் உடைகளும் என்றோ ஒரு நாள் சுத்தம் செய்யப் படுகின்றன. குளிக்கப் போனாலோ ஒரே கூட்டம். இத்துடன் அவசரம் அவசரமாகவும் குளிக்க வேண்டும். குளிப்பதற்காகக் கிடைக்கும் ஜலம் எவ்வளவு தெரியுமா ? சொன்னால் சிறைக்கு வராதவர்கள் நம்பமாட்டார்கள். தலையில் விட்டால் உடலும் நனையாது. உடையும் நனையாது. அவ்வளவுதான், உடனே துடைத்துக் கொண்டு வந்துவிட வேண்டியதுதான். குழாய்கள் இருக்கின்றன. பூப்போல் நீரைச் சொரியும் நீண்ட குழாய்களும், நீண்ட ஸ்நான அறைகளும் இல்லாமல் இல்லை. சிறையைப் பார்வையிடுகிறவர்கள் அவைகளைப் பார்த்து மகிழ்வார்கள். ஆனால் குழாய்களில் மட்டும் ஜலம் வருவதேயில்லை !

நான் இருப்பது தனிச் சிறைப் பகுதி. இந்தப் பகுதியிலுள்ள அறைகளில் மூட்டைப் பூச்சியுமில்லை; சிறு வண்டுகளுமில்லை. படுப்பதற்குக் கட்டில் கிடையாது ; திண்ணை கட்டி விட்டிருக்கிறார்கள். செங்கல் சுண்ணாம்பால் கட்டிய கூரை. இரும்புக் கம்பியாலான கதவு. அத்துடன் அறைகளில் அதிகச் சாமான்கள் அடைத்துக் கொண்டிருக்கவில்லை. அதனால்தான் மூட்டைப் பூச்சி தொல்லையில்லை.

ஆனால் வைத்தியசாலையில் இருக்கும் பொழுது இரவு முழுவதும் மூட்டைப் பூச்சி வேட்டையிலேயே கழித்தேன். அதை நினைக்கும்பொழுது தனிச் சிறைப் பகுதியில் இருப்பது தெய்வ லோகத்தில் இருப்பது போலிருக்கிறது. ஆயினும் ஈக்கள் தொல்லை அதிகமாகத்தான் இருக்கிறது. பிரிட்டிஷ் ஆட்சியில் சிறைச்சாலையில் என்னுடன் ஒண்டுக் குடித்தனம் நடத்தும் இவை சில கெட்ட பழக்கங்களை மட்டும் வைத்துக் கொள்ளாதிருக்குமானால் இவை என்னுடன் வசிப்பதிலும், புசிப்பதிலும் எனக்கு ஆட்சேபணையேயில்லை. ஆனால் இவை சகல பொருள்களிலும் ஆபாசக் கலை காண்பனவாக இருக்கின்றன. அதனால்தான் இவைகளை வரவொட்டாமல் தடுப்பதில் கண்ணுங் கருத்துமாயிருக்கிறேன்.

# இலட்சிய நோக்கில்...!

வையவன்

ஒரு வார வாக்கப்பிலிருந்து வெளியே வந்தார் கிருஷ்ணக் கோனார். சிரமத்தோடு சாலையைக் கடந்து சென்டிரலுக்கும் மூர் மார்க்கெட்டுக்கும் இடையிலிருந்த கூவத்துப் பாலத்தில் ஏறி நடந்தபோது அவருக்குத் தலை சுழன்றது. பிரம்மாண்டமான கூட்டம். பயங்கரமான வாகனங்கள். அலைகள் ஆர்ப்பரிக்கும் சமுத்திரத்தில் சிக்கிக் கொண்ட மாதிரி அவருக்குத் திகைப்பாக இருந்தது. எங்கே போவதென்று தெரியாமல் கால் போன போக்கில் அவர் நாலைந்து அடிகள் எடுத்து வைத்தார்.

'' சார்! பொம்மை வேணுமா....? சார் பொம்மை'' என்று பிளாட்பாரத்தில் ஒரு கூடைப் பொம்மைகளோடு ஒருவன் கண்ணைக் கடந்திருப்பாது நடக்கும் மனிதர்களிடம் கெஞ்சுவது போல் கேட்டுக் கொண்டிருந்தான்.



ஒன்றரையடி உயரத்தில் குழலூதிக் கொண்டிருக்கும் அழகான கிருஷ்ணன்பொம்மை. சென்னையின் இரைச்சல், நெருக்கடி, மிரட்டல் எல்லாவற்றையும் மறந்து கோனார் கூடையை நெருங்கினார். பொம்மையைப் பார்க்கப் பார்க்க, பண்டரிபுரத்தின் ஞாபகம் வந்தது.

'இந்நேரம் பாதி வழி போயிருப்பார்களா?' என்று அவர் நினைவு அலைபாய்ந்தது.

'யாருக்குமே, 'என்னடா, வெளியே போனவனைக் காணோமே' என்று தோன்றவில்லையே! ஊர் தெரியாதவனாச்சே, ரயில் கிளம்பற நேரம்னு கேட்டு வரைக்கும் வந்து யாராவது இந்தக் கோனானைக் கூப்பிட்டார்களா ?...ம்...ம்....'

கிருஷ்ணக் கோனாருக்கு வந்த ஆதங்கம் உடனே கலைந்து போய்விட்டது.

மனம் அசை போடக் கூடையை நெருங்கிய கோனாரைக் குழலூதும் கண்ணன் பொம்மை சொக்க வைத்தது. கண்களிலே ஒரு பரிகாசம். குழல் ஊதக் குவிந்திருக்கும் உதடுகளில் கள்ளத்தனமான ஒரு கேலி.

'என்ன கோனாரே! பண்டரிபுரம் போகலியா ?' என்று பொம்மை மிடுக்கோடு விசாரித்தது.

''உன் சூதும் மாயமும் யாருக்குத் தெரியப் போகின்றன பாண்டுரங்கா ?'' என்று கண்களில் நீர் தழுதழுக்க நினைத்துக் கொண்டார் கிருஷ்ணக் கோனார்.

''இன்னையா, பொம்மை வேணுமா ?'' என்று கூடைக்காரன் அவரைக் கேட்டான்.

''அந்தக் கிருஷ்ணன் பொம்மை என்ன விலை ?''

கூடைக்காரன் கோனாரை ஏற இறங்கப் பார்த்தான். ஆள் வாட்டசாட்டமாகப் பட்டிக்காட்டுக் களை வீச நிற்பதைக் கவனித்தான்.

''ஒரே விலை. ஏழு ரூபா!''

''ஏழு ரூபாவா ?''

கோனார் ஜேபியில் கான்ஸ்டபிள் கோதண்ட நாயுடு ஊருக்குப் போக டிக்கெட்டுக்குக் கொடுத்த ஐந்து ரூபாய் இருந்தது. அதுவும் பாண்டுரங்கன் திருவிளையாடல்தான். ஊருக்குப் போவதா, பொம்மையை வாங்கி விடுவதா என்று கோனாருக்கு மனம் பேதலித்தது. கண்ணன் குழலை ஊதுகின்ற குறும்பினால் அவரைச் சுண்டி இழுத்தான்.

ஆசாரிப்பள்ளத்தில் என்ன இருக்கிறது என்று தாம் திரும்பிப் போவது என்று யோசித்தார் கோனார்.

அவருக்குக் குடும்பம் இல்லை. ஒண்டிக் கட்டை. ஒரு குடிசையும் இரண்டு மாடுகளும் இருந்தன. பால் கறந்து ஊருக்கு ஊற்றிவிட்டு ஏதோ கிடைக்கிறதில் அவர் மகிழ்ச்சியாகக் காலம் கழித்தார்.

ஆசாரிப்பள்ளத்துப் பஜனைக் கோவிலில் எப்போதும் ஒரு கோஷ்டி சேரும். அனந்து ஐயர் நன்றாக மிருதங்கம் அடிப்பார். போஸ்ட் மாஸ்டர் சின்னமணி பெட்டி போடுவார். ராமலிங்கம் கஞ்சிரா.

பஜனைக் கோவிலுக்கென்று ஊருக்குள்ளே பணம் தண்டி மணி, சப்ளாக் கட்டை சரத்தில் தூங்கும் தூங்காமணி விளக்கு எல்லாம் வாங்கி வைத்திருந்தார்கள். மார்கழி முழுவதும் ஆசாரிப் பள்ளம் விடியற்காலையில் கோகுலமாகிவிடும். கிருஷ்ணக் கோனாருக்கு அருமையான குரல். பஜனை உச்சகதிக்குப் போகும் போது சப்ளாக் கட்டை ஜணஜணப்பதும், குரல் இழைவதும்,



வாத்தியங்கள் உருகுவதும் எல்லாம் சுழன்று சுழன்று தார ஓடிவிட்ட மாதிரி கண்களை மூடிய கிருஷ்ணக் கோனார் இமைகளிலிருந்து தாரை தாரையாக நீர் வழியும்.

ஆசாரிப் பள்ளத்திலிருந்து இரண்டாவது மைலில் மராட்டிப் பாளையம். அங்கேயும் ஒரு பஜனை கோஷ்டி. ஹரித்வார்; பண்டரிபுரம் என்று வடதேச யாத்திரை போய் வந்தவர்கள். ஒருநாள் பஜனையில் இரண்டு கோஷ்டிகளும் கலந்தன. மராட்டிப் பாளையக்காரர்கள் ஊர் திரும்பும்போது பண்டரி யாத்திரை ஆசையை இங்கே நன்கு விசிறி விட்டுப் போனார்கள்.

கோனாரின் பக்தியும் கிருஷ்ணப் பிரேமையும் கோஷ்டிக்காரர்களுக்குச் சற்று ஏளனமாயிருந்தன. அவர் மாதிரி கரைந்து உருக முடியவில்லையே என்ற பொறுமையாகக்கூட இருக்கலாம். பாடுகிற நேரம் தவிர மற்ற நேரங்களில் அவரை உதாசீனப்படுத்திப் பேசுவார்கள். மாடு மேய்த்துப் பால் கறந்து பிழைப்பவன். குடும்பம், சொத்து இல்லாதவன் என்ற அந்தஸ்துபேதம் வேறு.

மெல்ல ஒருவர் கோனாரைச் சீண்டினார்.

''என்ன கோனார், பண்டரிபுரம் போவோமா?''

''அதுக்கென்ன உடையாரே! எல்லோரும் கிளம்பினால் நானும் வந்துடறேன்!''

''யோவ், கோனாரே, வாய்ப் பேச்சா? எழுநூறு, எண்ணூறு ரூபாய் வேணும்! வைச்சிருக்கியா?''

''பாண்டுரங்கனைத் தரிசிக்க அவ்வளவு ரூபாயா ஆகும்?''

''பாண்டுரங்கன் ரயில் டிக்கெட் வாங்கிக் கொடுத்துச் சோறு போட்டு அழைச்சிக்கிட்டுப் போவானா?''

எல்லோருமே வசதியானவர்கள், கோனாரைத் தவிர. மூன்றும் மாசம் கிளம்பிவிடுவது என்று திட்டம் போட்டு விட்டார்கள். கோனார் எட்ட இருந்து முழங்காலைக் கட்டியவாறு நிராதரவாக யோசித்தார். டிராவல் சர்வீஸ்காரர்களுக்குப் பணம் அனுப்ப மூன்று நாட்கள் இருந்தன.

சின்னமணியிடம் இடுப்பில் துண்டைக் கட்டிக் கொண்டு வந்து நின்றார் கோனார்.

''ஸ்வாமி....! என்னையும் அழைச்சுக்கிட்டுப் போயிடுங்க. நம்ம கோஷ்டியை விட்டா இனிமே எனக்கு இந்த யாத்திரை கிடைக்காது.''

சின்னமணிக்கு எரிச்சலாக இருந்தது. மெள்ளக் கோனார் எல்லார் தலையிலும் கையை வைத்து ஓசியில் வந்துவிடப் பார்க்கிறார் என்று கோபம் வந்தது.

''என்னய்யா, அறிவுகெட்டத்தனமா பேசறே? அஞ்சோ பத்தோன்னு கொடுத்துச் சமாளிப்போம். எழுநூறு.... எண்ணூறு ஆச்சே!''

''நான் தர்றேன் ஸ்வாமி?''

''நீயா.... எப்ப.... கடன் கேக்கறியா?''

''இப்ப இதோ.....''

மடியிலிருந்து பணத்தை அவிழ்த்தார் கிருஷ்ணக் கோனார். சின்னமணிக்கு அதிர்ச்சியாக இருந்தது.

''ஏதுய்யா....?''

''மாடுகளையும் வீட்டையும் வித்துட்டேன்!'' என்றார் கோனார்.

டிசம்பர் 31 கல்கி

சிறுகதைச் சிறப்பிதழ்

சின்னமணிக்கு மார்பில் அடி விழுந்த மாதிரி இருந்தது.

''என்னய்யா இது..... பைத்தியம்! அப்புறமா என்ன பண்ணுவே? இதெல்லாம் கொஞ்ச நஞ்சம் இருக்கப்பட்டவங்களுக்கு வர்ற ஆசை. பண்டரிபுரம் போய்ட்டு வந்த பின்னாடி சோத்துக்குத் தாளம் போடுவியா?''

''எல்லாம் பாண்டுரங்கன் கிருபை! அன்னக்காவடியா அடிச்சா அடிக்கிறான். அன்னன்னிப் படியை அளக்கிறதானா அளக்கிறான். இந்த ஜன்மத்திலே அந்த மாதிரி க்ஷேத்திரத்தைப் பார்க்காம வேக வைச்சுத் தின்னு தின்னு என்ன வாழ்ந்துடப் போறோம்!''

சின்னமணி பேசாமல் பணத்தை வாங்கிக் கொண்டார். கிருஷ்ணக் கோனாரை யாரும் கூப்பிடவில்லை. அதனாலேயே அவர் செய்கை முந்திரிக் கொட்டை மாதிரி எல்லோருக்கும் ஒரு கௌரவக் குறைவாகத் தெரிந்தது.

'' சரி, வரட்டுமே ! நமக்கெல்லாம் தொண்டை கட்டினா கோனான் ஜமாய்ப்பான். கோஷ்டிக்கும் கூடமாட ஓர் ஆள் தேவை.''

எல்லோருக்கும் இது சரியென்று பட்டது.

ரயில்வே ஸ்டேஷனில் யாத்திரை ஸ்பெஷல் கேரேஜில் ஏறி உட்கார்ந்த பின்பு கோனாருக்குப் பொடி வாங்க மறந்தது ஞாபகம் வந்தது.

''வெளியே போய்க் கொஞ்சம் பொடி வாங்கிட்டு வந்துடறேன்.''

''ரயில் புறப்படப் போறது. சீக்கிரமா வந்து தொலையும்!''

அவர் ரயிலை விட்டிறங்கிப் பொடி வாங்க வெளி கேட்டுக்கு அருகில் வந்தபோது டிக்கட் பரிசோதகர் பிடித்துக் கொண்டுவிட்டார். அன்று 'ஸ்பெஷல் ரெய்ட்'. ஸ்டேஷன் தடபுடல் படும் நாள். அந்த நேரத்தில் ஸ்பெஷல் பார்ட்டிக்காரர்கள் வரவும் அவர்கள் பாஷை புரியாமல் கோனார் உடுப்பைப் பார்த்துக் கழுத்தைப் பிடித்துத் தள்ளிக் கொண்டு போலீஸ் ஸ்டேஷனுக்கு இழுத்துச் சென்றார்கள். பண்டரிபுர கோஷ்டிக் கதையை யாரும் நம்பத் தயாராயில்லை. ஒரு வாரம் சிறைவாசம். பை, பணம் எல்லாம் ரயிலோடு போய்விட்டன.

இனி கோனாருக்கு ஆசாரிப் பள்ளத்தில் என்ன இருக்கிறது? மாடுமில்லை; வீடுமில்லை. பஜனை கோஷ்டிக்காரர்களும் ஊர் திரும்ப இன்னும் ஒன்றரை மாசம் ஆகும்!

பேரம் பேசி நாலு ரூபாய்க்குப் பொம்மையைத் தீண்டி வாங்கிய போது கோனாருக்கு உடம்பு சிலிர்த்தது. மனம் ஆனந்தக் கூத்தாட நடந்தார்.

எங்கே போவதென்று அவருக்குத் திட்டமில்லை. எங்கே போனாலும் எல்லாம் ஒன்றுதான் என்று தெரிந்தது. நடந்து கொண்டேயிருந்தார். பன்னிரண்டரை மணிக்கு அமிஞ்சிக்கரை தாண்டி ஒரு டீக்கடையில் நாலு இட்டிலி சாப்பிட்டார். பூந்தமல்லிக்கு அவர் வந்து சேர்ந்த போது இரவாகிவிட்டது.

ஒரு லாரிக்காரன் காலில் புழுதியும் கையில் பொம்மையுமாகக் கோனார் நடந்து வருவதைக் கவனித்தான்.

அவனுக்குள் ஏதோ அசைந்தது.

''ஏன் பெரியவரே, எங்கே போறே ?''

வழியில் வண்டிக்காரர்கள் பேசிக் கொண்டதில் கங்குவார் சத்திரம் என்று ஓர் ஊர் இருப்பதாகத் தெரிந்து கொண்டார்.

''கங்குவார் சத்திரம்.''

'' நடந்தே வர்றியே, கையிலே காசு இல்லியா ?''

கோனார் மெதுவாகச் சிரித்தார்.

''வண்டியிலே ஏறிக்கோ. உன்னைச் கங்குவார் சத்திரத்திலே விட்டுட்டுப் போறேன்.'

'இதுவும் அவன் விளையாட்டு' என்று நினைத்துக் கொண்டார் கோனார். கங்குவார் சத்திரத்தில் அவரை இறக்கி விட்டு லாரி போன பின்பு அவர் தொடர்ந்து நடந்தார்.

மிகவும் இருட்டிவிட்டது. கால்கள் சோர்ந்து விட்டன. வழியிலே ஏதோ மண்டபம் மாதிரி தெரிந்தது. சுற்றிலும் தோட்டம் மாதிரி செடி கொடிகள். காரை பெயர்ந்து மண் உறுத்திற்று. கண்களைக் களைப்பு இழுத்தது. படியேறிப் படுத்தார்.

அதிகாலையில் ''யோவ்.... யோவ்....'' என்று யாரோ அவரைத் தட்டி எழுப்பினார்கள். கோனார் விழித்தார். முப்பத்தைந்து வயது மதிக்கலாம் போல் ஒருத்தி. கையில் துடைப்பத்தோடு நின்று கொண்டிருந்தாள் நன்கு விடிந்து விட்டிருந்தது.

கோனார் எழுந்தார்.

''ஆருய்யா, நீ ?''

''வழிப் போக்கன் அம்மா !''

''ஏனய்யா, என்னைப் பார்த்தா உனக்கு அம்மாவாத் தோணுதா?''

அப்போதுதான் அவளை ஏறிட்டுப் பார்த்தார் கோனார். வாட்ட சாட்டமாக, முற்றிப் பழுத்த தேங்காயளவுக்கு ஒரு கொண்டையோடு, பெரிய கண்களும், தடித்த உதடுகளுமாக அவள் சண்டைக்காரி போல் நின்றாள்.

'' ஏதோ வாயிலே வந்துடுச்சு.''

அவரை ஏற இறங்கப் பார்த்தாள்.

''எந்த ஊரு?''

''ஆசாரிப் பள்ளம்.''

''ஆசாரிப் பள்ளமா...? அது இன்னியா பேரு ? எங்கே இருக்குது அது?''

''வேலூரு தாண்டி.''

''இங்கே எங்கே வந்தே ?'' இந்தக் கேள்வியில் அவள் ஸ்வரம் தாழ்ந்துவிட்டதைக் கவனித்தார்.

''கங்குவார் சத்திரம் வந்தேன். அப்பிடியே கௌம்பிட்டேன்.''

'' கால்நடையாவா ?'' என்று கேட்டவாறே அவரைக் கீழ்க் கண்ணால் பார்த்து

# மைக்ரோ:ஃபைன்ட்

# ஆஸ்ப்ரோ

## அதிவேகமாகக் கரைந்து, அதிவேகமாகக் கிரகிக்கப் படுகிறது. அதனால்தான் அது அதிவேகமாக வலியைப் போக்கி விடுகிறது–

**சாதாரண வலிநிவாரண மாத்திரைகளைவிட இருமடங்கு அதிக வேகத்துடன் வலியைப் போக்கி விடுகிறது.**









சாதாரண மாத்திரைகளைப் போலன்றி, ஆஸ்ப்ரோவின் நுண்ணிய அணுக்கூறுகள் அதிவேகமாகக் கிரகிக்கப் படுகின்றன. வலியின் இருப்பிடத்தை அதிவேகமாக அடைகின்றன. உங்களுக்கு அதிவேக நிவாரணம் அளிக்கின்றன.

கீழ்க்கண்டவைகளுக்கு மைக்ரோ:ஃபைன்ட் ஆஸ்ப்ரோ சாப்பிடுங்கள்: தலைவலி • உடல் வலி • ஜலதோஷம் • ஃப்ளு • மூட்டுவலி • தொண்டை அழற்சி • பல்வலி

சாப்பிடும் அளவு: வயது வந்தவர்கள்: இரண்டு மாத்திரைகள். தேவைப் பட்டால் மீண்டும் சாப்பிடவும். குழந்தைகள்: ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர் சொற்படி.

**ஆஸ்ப்ரோ மட்டுமே மைக்ரோ:ஃபைன் செய்யப் படுகிறது, அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக.**

நிகோலஸ் Ⓝ தயாரிப்பு

A.G.57 TM

விட்டுக் கால் பெருவிரலால் மண்ணைக் கிளறிவிட்டவாறே நின்றான் அவள்.

கோனருக்குப் பெண் வாசனையே தெரியாது. வாடிக்கைக்குப் பால் ஊற்றும் வீடுகளில் கிழே குனிந்தவாறே பேசிவிட்டுத் திரும்பிவிடு வார். அவருக்குக் கல்யாணம் பேச ஆளில்லே. காசுமில்லே. கிருஷ்ண பக்தியில் உணர்ச்சிகள் வேறுவிதமாகச் செலவாகிவிட்டன. இப் போது இந்தக் கோலத்தில் ஒரு குறிப்பு தெரிந்ததும் அவருக்குத் தாமே ரொம்ப மாறிவிட்ட மாதிரி ஒரு புதுமை தோன்றிற்று.

''கால் நடைதான்.''

''அதென்ன பொம்மை?'' என்று துடைப் பத்தைப் போட்டுவிட்டு அவருடைய அனு மதியை எதிர்பாராமல் அவள் பொம்மையை எடுத்துக் கொண்டாள்.

கற்றையாக முடிந்திருந்த அந்தக் கட்டுக் கடங்காத கூந்தல் விசிறி நின்றது. காற்றில் அசைந்தது.

''ரொம்ப நல்லா இருக்குய்யா.....இந்தக் கோவில்லே வைச்சுடலாம்! இங்கே சிலே எதுவுமில்லாம படத்தைத்தான் மாட்டியிருக் கிறானுவ.''

அப்போதுதான் அது ஒரு கோயில் என்று தெரிந்தது கோனருக்கு. உள்ளே போய்ப் பார்த்தார். வரிசையாகப் படங்களே மாட்டி யிருந்தார்கள். கட்டடம் ஒரு பக்கம் காரை பெயர்ந்து சிதிலமாகக் கிடந்தது. படங் களுக்குப் போட்டிருந்த பூக்கள் காய்ந்து தொங்கின.

'இதுவும் அவன் விளையாட்டு' என்று எண் ணியவாறே வெளியே வந்தார் கோனர்.

''வெச்சுடலாமே!'' என்றார்.

''தோ, இங்கே குந்து! கோயிலேப் பெருக் கித் தண்ணி தெளிச்சுட்டு வர்றேன். நீ மூஞ்சி முகம் கழுவிக்கினு நாஸ்தா தின் னுட்டு ஊருக்குப் போவியோ..... காட்டுக் குப் போவியோ..... போவே !''

கிருஷ்ணக் கோனர் எங்கும் போகவில்லே. அங்கேயே தங்கிவிட்டார். கோயிலுக்குக் கிழக்கப் புறத்தில் இருந்தது அவளது குடிசை. ஒரு பர்லாங்கில் சிறு கிராமம். நாலு நாட்களில் ரங்கத்துக்கு—அதுதான் அவள் பெயர்—அந்த ஊர் எவ்வளவு பயப்படுகிறது என்று அவருக்குத் தெரிந்து விட்டது.

நாலு கிராமங்களேச் சுற்றிக் காய்கறி வாங்கிக் கொண்டு சுங்குவார் சத்திரத்துக்கு வண்டி கட்டிப் போய் லாரியில் ஏற்றிவிடு வாள் ரங்கம். அது கொத்தவால்சாவடிக்குப் போகும். வாரத்துக்கு ஒன்றில் இரண்டில் சென்னைக்குப் போய்ப் பணம் வசூல் செய்து வருவாள். ரங்கம் ஒண்டிக்கட்டை. கல்யாண மான மறு வருஷம் அவள் புருஷன் உள்ளூ ரில் இருந்த சக்கிலியப் பெண் ஒருத்தியை அழைத்துக் கொண்டு ரங்கூனுக்கு ஓடி விட்டானும்.

ஒரு நாள் தான் கொண்டு வந்து வைத்த பொம்மைக்கு மாலே போட்டு விளக்கேற்றுகை யில் பழக்க தோஷத்தால் கோனரின் வாய் உரக்கவே முணு முணுத்தது. ''பாண்டுரங்க விட்டலே...பண்டரிநாதா விட்டலே...''

''யோவ், உனக்குப் பாட வருமா ?''

''ஏதோ சுமாரா வரும்.''


''எவன் வேணுமோனாலும் முன்னாடி போகட்டும்! எனக்குக் கவலே இல்லே. வின் போஸ்டே என் னிடம்தானே இருக்கு!''

கோனர் பாட ஆரம்பித்து விட்டார். பண்டரிபுரம் அவர் கண்ணெதிரே தெரிந்தது.

ஏதோ ஒரு நேரத்தில் நிறுத்திவிட்டுத் திரும்பியபோது ரங்கம் கண்களில் நீர் துளிக்க மகுடிக்கு அடங்கியவள் மாதிரி அவ ரைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

''ரொம்ப நல்லா பாடறியே நீ.'' குரல் கம்மிவிட்டது. கோனரின் மீது ஒரு மரி யாதை கார்வையிட்டது. அதற்கப்புறம் ரங்கம், கோனரை 'யோவ்' என்று அழைப்ப தில்லே.''

எல்லாம் பாண்டுரங்களின் விளையாட்டு என்று கோனர் எண்ணினர். காலேயிலும் மாலேயிலும் விளக்கேற்றிவிட்டுக் கோனர் கோயிலில் பாடிக் கொண்டிருப்பார். ஒரு நாள் லாரி வந்து நின்றது. டிரைவர் இறங்கி வந்து தண்ணீர் கேட்டுக் குடித்துவிட்டுக் கோனர் பாடுவதைக் கேட்டான்.

''இங்கே உண்டி இல்லியா, சாமி?'' என்று அவர் கவனத்தைக் கலேத்தான்.

''உண்டியா ?''

''காசு போடறதுக்கு.''

''இல்லியே !''

திரும்பி வரும்போது அவன் ஓர் உண்டியல் வாங்கி வந்து வைத்தான். ஊரார் ஒவ் வொருவராக வந்து கோயிலில் உட்கார்ந் தார்கள். இருபது நாட்களுக்குள் அது ஆசாரிப்பள்ளமாகிவிட்டது! சப்ளாக் கட்டை ஹார்மோனியம், மிருதங்கம் ஒவ்வொன்றாக வந்து சேர்ந்தன. லாரிகளும் பஸ்களும் நின்று கண்டக்டரோ, கிளீனரோ ஓட்டமாக வந்து உண்டியில் காசு போட்டுவிட்டு வண்டியை எடுத்தார்கள்.

கிருஷ்ணக் கோனர் கயிற்றுக் கட்டிலில் படுத்திருந்தார். ரங்கம் அவருக்குக் கால்மாட் டில் உட்கார்ந்து சிசுருஷை செய்து கொண் டிருந்தாள். அவர் மனசு எங்கோ ஓடித் திரிந்தது.

''கோனரே... கால்வலி கேக்கலியா...' உன்னே யாரு அம்மாந்தூரம் போயி மாட்டை மேய்ச்சாரச் சொன்னது? இதோ, சும்மா அப்படி ரோட்டுக்காலே காட்டினு பர்லாங் போனியானு போதுமே!''

ரங்கம் கோனருக்காக ஒரு மாடு வாங்கி விட்டிருந்தாள். அவருக்கும் ஒரு வேலே. கறவைப் பணமும் வந்தது.

''அது இல்லே, ரங்கம், எங்க கோஷ்டி இப்போ எங்கே இருக்கும்னு நெனேக்கிறேன்!''

''நீ எப்ப வந்தே? முப்பத்திரண்டு நாளு ஆச்சு. நீ சொன்ன கணக்குப்படி இரும்பு முகத்திலே இருப்பாங்க.''

கோனார் மோட்டு வளையைப் பார்த்துப் பெருமூச்செறிந்தார்.

''இன்னா கோனாரே...பெருமூச்சுவிடறே?'' பண்டரிபுரம் போவலியேன்னு அடிச்சுக்குதா மனசு ?''

''.....................''

''உன்னைத்தான் கண்ணன் இங்கே கூட்டியாந்திருக்காரே ! பொழுது போய்ட்டா நாயும் நரியும் மேயும். இப்ப பண்டரிபுரம் இங்கே வந்துட்ட மாதிரி பாட்டும் பஜனையும் பூசையும்......'' என்றாள்.

''இதுவும் அவன் விளையாட்டு'' என்று புரண்டு படுத்தார் கோனார். மனசு சமாதானம் அடைந்தது.

அடுத்த வாரம் ரங்கம் கொத்தவால்சாவடிக்கு வசூலுக்குப் போன போது கூடச் சென்றார். காலை ஏழு மணிக்கெல்லாம் ரங்கத்தோடு சென்டிரலுக்கு வந்தார் கோனார். இரவு ஒன்பது வரைக்கும் எல்லா ரயிலையும் பார்த்துவிட்டு ஏமாற்றத்தோடு திரும்பினர் இருவரும்.

காலையில் எழுந்ததும் பித்துப் பிடித்தது போல் கட்டிலில் உட்கார்ந்திருந்த கோனாரைப் பார்த்தாள் ரங்கம்.

''நம்ம ஊர்க்காரங்க நாலு பேரு கொத்தவால்சாவடி வியாபாரிங்களோடே வடக்கே டூர் போறாங்களாம். நாம ரெண்டு பேரும் போகலாம் வார்றியா ?''

''பணம் ஏகப்பட்டது ஆவுமே ரங்கம் !''

''அதைப் பற்றி உனக்கு என்னா கவலே ? வர்றியா சொல்லு?''

''மாட்டை வேறே வாங்கிட்டு இருக்கே, என்னை நம்பி........''

''ஆங்..... பொல்லாத மாடு ! ஐம்பது ரூபா லாபத்துக்குச் சாயங்காலத்துக்குள்ளே வித்துட்டு வந்துடறேன். நீ வர்றியா ?''

கோனார் முகம் பளிச்சென்று மலர்ந்தது. முன்பின் தெரியாத அவருக்காக இவ்வளவு தொகை செலவழிக்கத் தயாராய்விட்டாளே! இதுவும் அவன் விளையாட்டுத்தான்!

பெட்டியும் படுக்கையுமாக ரங்கமும் கோனாரும் சென்டிரலில் நுழையும்போது, ''யோவ், கோனாரே !'' என்று ஒரு கூப்பாடு கேட்டது.

அவர் திரும்பினார். வேணு உடையார், பெருமாள் முதலி.... சின்னமணி... அனந்து ஐயர்..... ஆட்கள் கறுத்து இளைத்து ரொம்ப அடிபட்ட மாதிரி இருந்தனர். ஒரே சந்தோஷ ஆரவாரத்தோடு ஓடி வந்தனர்.

'' எங்கேயா, போயிட்டே ? எப்படி இருந்தே ?'' கேள்விகள் பறந்தன.

''ஆங்.... உங்களாட்டம் நடுவாந்தரத்திலே கையைக் கழுவுறவங்களோடு வந்தா என்னா பாடுபடணுமோ, அதெல்லாம் அனுபவிச்சுட்டாரு'' என்று சீறினாள் ரங்கம்.

''யாருய்யா அது, பொம்பளே? மதராசிலே புடிச்சுக்கிட்டியா ?''

''அட, யார்ராவன்.... அறிவு கெட்டவன் ! மாடா ஆடா புடிச்சுக்கிடறதுக்கு?'' என்று ரங்கம் விளாசினாள். ஆசாரிப் பள்ளக்காரர்கள் வாயடங்கிப் போய் விட்டார்கள்.

''நீ போனதும் 'கேட்'டு வரையிலே வந்தோம். காணோமய்யா உன்னை..... யாரு இறங்கறது? யாரு நிக்கறது ஒண்ணும் விளங்கலே. யாரு இறங்கினாலும் கட்டின துட்டு பூடும்'' என்று இழுத்தார் உடையார்.

''நீ வராதது வழியெல்லாம் மனசு அடிச்சுக்கிட்டதுய்யா கோனாரே.... பண்டரிபுரம் கோயில்லே உன்னை நினைச்சுக்கிறோம். உன்னை விட்டுட்டுப் போனதுக்கு அபராதம் மாதிரி வேணு உடையாருக்குக் குளிர் காய்ச்சல். என் மணிபர்சு திருட்டுப் போயிடுச்சு. அனந்து ஐயர் திருகு செம்பை வுட்டுட்டாரு.''

''எங்ககூட நீ வரலியே தவிர மனசுக்குள்ளே எங்களோடேவேதான்யா இருந்தே!''

எல்லோருக்கும் ஏதோ தப்பு செய்த உறுத்தல். கோனார் மீது மரியாதையை அதிகமாக்கி அதை நிவர்த்திக்கப் பார்த்தார்கள். கோனார் நடந்ததைச் சொன்னார். இப்போது சுற்றுலா செல்வதையும் சொன்னார்.

''அப்புறமா ஊருக்கு வரமாட்டே ?''

''கோனாருக்கு இன்னும் இன்னா இருக்கு அந்த ஊரிலே?'' என்றாள் ரங்கம் குறுக்கே.

''அம்மா... மகராசி... நீ சும்மா இரு.''

''கோனாரே! என்னைப் பார்த்துச் சொல்லுய்யா.....! நம்ம கோஷ்டி கலைஞ்சு போய் விடும்யா! உன் பாட்டுக்குத்தானய்யா கோஷ்டி சேர்ந்தது.''

கிருஷ்ணக் கோனார் பொறி கலங்கி நின்றார். அவர்கள் சொல்வது உண்மைதான். அவர்தான் ஒவ்வொருவரையும் போய் வீடு வீடாக அழைத்து நிற்பார். அவர் பேதலித்து நிற்பதைப் பார்த்து ரங்கம் பயந்து விட்டாள்.

''கோனாரே! இன்னா மெரள்றே? என்னை அநாதையா விட்டுட்டுப் போயிடலாம்னு பார்க்கிறியா ?''

''கோனாரே, நீர் வரலேன்னா அங்கே பஜனை கோஷ்டியே சேராதுய்யா.... பாண்டுரங்கன் அங்கே அநாதையாய் நிப்பாருய்யா.'' வேணு உடையார் முடுக்கினார்.

இருவரையும் மாறி மாறிப் பார்த்தார் கோனார். ''நான் ஊருக்கே போறேன், ரங்கம்!''

''அடி சக்கை! கோனார் என்னிக்கும் நம்ம கோனார்தான்!'' என்று அவரைப் பரவசத் அணைத்தார் வேணு உடையார்.

''நானு.....'' என்று வாய் வரை வந்த ஏக்கத்தை ரோஷக்காரி ரங்கம் சட்டென்று மாற்றிக் கொண்டாள். அவள் வாழ்க்கையில் இரண்டாவது அலை பின்வாங்கி விட்டது.

''அப்போ நானு பண்டரிபுரம் போறேன்!'' என்று மனத்தில் துயர் வெடிக்க விடைபெற்றாள் ரங்கம்.

''போய் வா ரங்கம்! எனக்கு வேளை வரல்லே. பாண்டுரங்கன் இன்னும் என்னைக் கூப்பிடறதுக்கு யோசிக்கிறான்!''

''சரி..... எங்கேயோ உம் பிரியப்படி இரு. உன் சகவாசத்தாலே நானாவது பண்டரிபுரம் போய்ட்டு வரேன்!''

லட்சிய சித்தியான பண்டரிபுரத்தைவிட ஆசாரிப்பள்ளத்தில் கிருஷ்ணன் அநாதையாகிவிடுவான் என்ற விஷயம் கோனாரை வடக்கிலிருந்து மேற்கே திருப்பிற்று.

# இலக்கிய மலர்கள்

மீ.ப.சோமு

## 6. ஒரு கவிதை நாடகம்!

அணி அணியாகத் தேர்கள் வருகின்றன. அவற்றை இழுத்துக் கொண்டு வருகின்றன நீண்ட பிடரியோடு கூடிய குதிரைகள். இதோ கம்பீரமாக நடந்து வருகின்றன ஆனைகள்!

இந்தப் படைகளுக்கு நடுவிலே பல்லக்கில் வருகிறான் — யார்? யாரோ ஓர் ஒய்யாரமான அரசன்!

ஊர்வலம் தெருக்கோடியை அடைந்து திரும்புகிறது. அப்போது அந்த ஊர்வலத்துக்கு எதிரில் வருகிறான் ஒரு பாணன், சங்கீதக்காரன், கையிலே யாழுடன்! அப்படியே வியப்பிலே அசைவற்று நிற்கிறான் அந்தப் பாணன்.

ஆறை என்ற பெரிய நகரம் அது! வாண பூபதி அரசாள்கிற தலைநகரம்! அங்கே இப்படி ஒரு புதிய மன்னவன் ஊர்வலமாக வருவதற்கு என்ன காரணம் என்று திகைக்கிறான் சங்கீதப் பாணன்! யோசித்ததும் அவனுக்கு நிலைமை புரிந்து விட்டது.

''ஓகோ! நம்முடைய மகதேச வாணபூபதிக்குத் தேரும், குதிரையும், ஆனையும் அடங்கிய தொகுதிகளைக் கப்பமாகக் கட்டுவதற்கு இந்த அரசன் இப்படி வருகிறான்!'' என்று தீர்மானிக்கிறான் பாணன்! அவனிடம் சென்று ''நீ எந்தத் தேசத்துக்கு அதிபதியோ? உன் பெயரை நான் அறிந்து கொள்ளலாமோ?'' என்று விசாரிக்கிறான்.

**தேரு ளைப்புரவி வார ணத்தொகுதி**
**திறைகள் கொண்டு வரும் மன்ன! நின்**
**தேசம் ஏதுனது நாமம் ஏது? புகல்!**

*[உளை — பிடரி. புரவி—குதிரை. வாரணம்—ஆனை. திறை—கப்பம். புகல்—சொல்வாயாக!]*

''தேர், குதிரை, ஆனை முதலியவற்றைக் கப்பமாகக் கொண்டு வரும் மன்னனே! நின் தேசம் எது? உன் நாமம், பெயர் என்ன?'' என்று கேட்க ஆரம்பிக்கிறான் பாணன்! ''மன்னன்'', அதாவது மன்னனைப் போலத் தோற்றம் தருகிறவன் மறுமொழி பேசுகிறான்:

**செங்கை யாழ்தடவு பாண! கேள்!**
**வாரும் ஒத்தகுடி நீரும் நாமும்!**

*[செங்கை — இசையினால் செம்மை பெற்ற கை. யாழைத் தடவித் தடவி, வாசித்து வாசித்துச் செம்மை பெற்ற கை.]*

''வாருமையா இப்படி, பக்கத்திலே! செங்கையாலே யாழ் தடவுகிற பாணரே! ஒதுங்கி நிற்கிறீரே. அருகில் வாரும்! நீரும் நாமும் ஒரே இனந்தான்!''

**வாரும் ஒத்தகுடி நீரும் நாமும், மக**
**தேசன் ஆறைநகர் காவலன்**
**வாண பூபதி மகிழ்ந்துஅ ளித்தவெகு**
**வரிசை பெற்றுவரும் புலவன்யான்!**

*[காவலன் — அரசன்]*



''மகதேசன், ஆறைநகர் அரசனான வாண பூபதி மகிழ்ச்சியோடு கொடுத்த பரிசு வரிசைகளை வாங்கிக் கொண்டு திரும்புகிற புலவனையா நான்! என்னை இந்த வரிசைகளோடு பார்த்ததும் ஒரு சக்கரவர்த்தி என்றே நினைத்து விட்டீரே, பாவம்!''

இவ்வாறு சொல்கிறான் அந்த மனிதன்! அரசக் கோலத்தில் எதிர்ப்பட்ட அந்த மனிதன் அரசனில்லை, பரிசுகள் பெற்றுத் திரும்புகிற ஒரு கலைஞன்தான் என்று தெரிந்ததும் அந்தப் பரிசுப் பொருள்களை ஏற இறங்கப் பார்க்கிறான் பாணன்.

''என்ன பாணரே, பார்க்கிறீர்? நீரும் இத்தகைய பரிசுகள் பெற முடியும். பசியோடு பார்க்கிறீரே பாவம்! நீரும் செல்லலாம், அவனிடத்திலே!''



## கம்ப்யூட்டர் மயம்!

மூன்று மில்லியன் புத்தகங்கள் அடங்கிய ரோம் தேசிய நூலகம் வெகு விரைவில் தன் புதிய கட்டடத்துக்கு இடம் பெயரப் போகிறது. அந்தப் புதிய நூலகத்தில் ஷெல்புகளில் புத்தகங்களை அடுக்கி வைக்கப் போவது கம்ப்யூட்டர்கள்தானாம்! அதோடு மக்கள் வசதிக்கேற்ப அந்தப் புதிய கட்டடத்தில் எவ்வளவு அதிகமாக இடத்தை ஆக்கிரமித்துப் புத்தகங்களை வைக்க முடியும் என்பதையும் அந்தக் கம்ப்யூட்டரே நிர்ணயிக்கப் போகிறதாம். — பி. எஸ்.

**னீரும் இப்பரிக பெற்றுமீளவரல்**
**ஆகும்; ஏகும்!**

*''என்னையா, பாணரே, இன்னும் திகைத்து விழிக்கிறீர்! பாதை தெரியாதா? அடையாளம் சொல்கிறேன் கேளும்!''*

**அவன் முன்றில்வாய்**

*[முன்றில் — முற்றம்]*

*வாண பூபதியினுடைய முற்றத்து வாசலிலே,*

**அவன் முன்றில்வாய்**
**நித்தி லச்சிகர மாடமாளிகை**
**நெருங்கு கோபுரம் மருங்கெலாம்**

*[நித்திலச் சிகர மாடம் — முத்துக்கள் பதித்த சிகர மாடங்கள். மருங்கு — பக்கத்திலே, சுற்றி.]*

*அவனுடைய முற்றத்தில் முத்துச் சிகரம் கொண்ட மாட மாளிகைகள்! அவற்றைச் சுற்றிக் கோபுரங்கள் நெருங்கி நிற்கும்.*

**ஆரும் நிற்கும்**

*[ஆர் — ஆத்தி.]*

*முற்றத்தில் ஆத்தியும் நிற்கும். அதோடு, உயர் வேம்பும் நிற்கும், வளர்*

**பனையும் நிற்கும்; அதன் அருகிலே**
**அரசு நிற்கும்**

*வாண அரசனுடைய முற்றத்தை வருணனை செய்கிற அழகின் நுட்பத்தைக் கவனிக்க வேண்டும்.*

*ஆத்தி மரமும், வேப்ப மரமும், பனை மரமும் நிற்கும். அருகில் அரச மரமும் நிற்கும் என்று அடையாளம் சொல்வது போல் இருக்கிறது பாட்டு. ஆனால் உட்பொருள் வேறு.*

*ஆர் என்றால் ஆத்தி. இங்கே அது, ஆகுபெயராகி, ஆத்திமாலை சூடிய சோழனைக் குறிக்கிறது. அதுபோலவே வேம்பு என்றால் வேப்ப மாலை சூடிய பாண்டியன். பனை, பனை மாலை தரித்த சேர மன்னன். சோழனும் பாண்டியனும், சேரனும் இத்தகைய மாலைகள் சூடிக்கொள்வது அவர்களுடைய அரச மரபு ஆகும்.*

*வாண பூபதியினுடைய முற்றத்தில் மூவேந்தர்களுமே காத்து நிற்பார்கள். அவர்களுக்கு அருகிலே சற்று ஒதுங்கி மற்றச் சிற்றரசர்கள் நிற்பார்கள்.*

**அரசு நிற்கும்அர சைச்சு மந்தசில**
**அத்தி நிற்கும்**

*[அரசு — மற்ற அரசர்கள். அத்தி — ஆனை]*

*அரசர்கள் நிற்பார்கள். அந்த அரசர்களைச் சுமந்து வந்த அத்தி — அத்தி என்றால் அத்தி மரம் இல்லை, ஆனை — நிற்கும். இவைதான் இங்கேயுள்ள அடையாளங்கள்!*

*சேர சோழ பாண்டியராகிய மூவேந்தரும் பணிந்து நிற்கும்படி செங்கோல் செலுத்தியவன் வாணபூபதி. அவனுடைய கலையார்வம் மட்டில்லாத பேரார்வம்! கலைஞர்களுக்கு ஆனையும் குதிரையும் தேருமாகப் பெரிய பெரிய அரசப் பரிசுகளை கொடுத்தனுப்புவான் அந்தக் கலைவள்ளல் — இதுதான் பாடலின் செம்பொருள். ஆனால் அந்தப் பொருளை ஒரு சுவையான கற்பனையாக, உரையாடல் கொண்ட நாடகமாகவே கவிதையிலே நடத்திக் காட்டுகிறார் கம்பர், இந்தத் தனிப் பாடலிலே!*

*தேரும் புரவியும் ஆனையுமாகத் தாளம் போட்டுக் கொண்டு ஓடிவருகிறது பாடல்! பரிசு பெற்றுத் திரும்புகிற புலவனை ஒரு பேரரசன் என்றே நினைத்து மயங்குகிற பாணனின் திகைப்பும், அதிலிருந்து எழுகிற உரையாடலும் நாடகப் பண்போடு இகழ்கின்றன, அரியதோர் தாள அமைப்பிலே!*

**தேரு ளைப்புரவி வார ணத்தொகுதி**
**திறைகள் கொண்டுவரு மன்னரின்**
**தேச மேதுனது நாம மேதுபுகல்**
**செங்கை யாழ்தடவு பாண, கேள்**
**வாரு மொத்தகுடி னீரு நாமுமக**
**தேச குறைநகர் காவலன்**
**வாண பூபதி மகிழ்ந்தளித்தவெகு**
**வரிசை பெற்றுவரு புலவன்யான்**
**னீரு மிப்பரிக பெற்று மீளவர**
**லாகும் ஏகுமவன் முன்றில்வாய்**
**நித்தி லச்சிகர மாட மாளிகை**
**நெருங்கு கோபுர மருங்கெலாம்**
**ஆரு நிற்குமுயர் வேம்பு நிற்குவளர்**
**பனையு நிற்குமதன் அருகிலே**
**அரசு நிற்குமர சைச்சு மந்தசில**
**அத்தி நிற்குமடை யாளமே!**

*உரையாடல் கற்பனை. நாடகமும் ஒரு கற்பனைதான். ஆனால் வாணபூபதியின் வள்ளன்மையும், அதைப் பாடுகிற கம்பருடைய கவிதையும் சத்தியமான பேருண்மைகள்!*

# அனுமனுக்கு அபிஷேகம்

நாமக்கல்லில் குடிகொண்டுள்ள வானளாவும் ஆஞ்சநேயப் பெருமானின் மகிமை சொல்லொணாதது. ஆஞ்சநேயர் வழிபட்டுவந்த சாலக்கிராமமே இங்கே நாமகிரியாக வளர்ந்து நிற்கிறது என்று ஐதிகம். அம்மலையை நோக்கி மற்றோர் மலையாக நிற்கிறார் மாருதி. புத்தி பலத்திலும், தேக பலத்திலும் மலை; ஆனால் அதே சமயத்தில் அடக்கத்திலும் மலை. வீரத்தில் மலை: ஆனால் அதேபோதில் கருணையிலும் மலை. ஆதியில் கடல்மீதும், அசோக வனத்திலும், மதுவனத்திலும் சஞ்சரித்தவராயினும், இன்றும் கூட ராமநாமம் ஒலிக்கிற இடங்கள் அனைத்திலும் சஞ்சரிப்பவராயினும் சஞ்சலிக்காத பக்திக்கும், தூய்மைக்கும் மலையாக நிற்கிறார் மாருதி ஆஞ்சநேய ஜயந்தி ஜனவரி 4-ந் தேதி (மார்கழி அமாவாசை) யன்று நிகழ்கிறது. இம்மாதம் 26-ந் தேதியிலிருந்து நாமக்கல்லில் பெருவிழா நடக்கிறது. அஞ்சனைச் செல்வனுக்கு லட்சார்ச்சனை செய்கிறார்கள். மகாபிஷேகம் செய்கிறார்கள். ஜயந்தி யன்று மகா மூர்த்திக்கு வடை மாலை சாத்துகிறார்கள். ஜனவரி முதல் தேதி இந்த விசுவரூபப் பெருமானுக்குச் சந்தனக் காப்பு சாத்தப்படுகிறது. நம் மனம் குளிரவும், உலகம் குளிரவும் புத்தாண்டுத் தொடக்கத்தில் ஒரு பொற்பணி. ரூ. 5 அனுப்புபவர்களுக்கு அனும மூர்த்தியின் படமும் பிரசாதமும் அனுப்பப்படும். ரூ. 15 அனுப்புகிறவர்களுக்கு சகஸ்ரநாம அர்ச்சனைப் பிரசாதத்துடன், வெள்ளி வில்லை அனுப்பப் படும். நிதி அனுப்ப வேண்டிய முகவரி:

திரு K. B. நரசிங்க ராவ், பொருளாளர், ஹனுமத் ஜயந்தி அபிஷேக சங்கம், இந்தியன் பாங்க், நாமக்கல், சேலம் மாவட்டம்.






**ஒரே ஒரு சலவையில்**
**ஸூப்பர் ஸர்ஃப்,**
**வேறெந்த சலவைப்**
**பவுடரையும் விட**
**அதிக வெண்மை தருகிறது!**

அமோகமான சலவைத் திறன் படைத்தது ஸூப்பர் ஸர்ஃப். கண்மறைவான அழுக்குகளையும் அகற்றிவிடும். காண்போர் பொறுமைப்படும் கற்பனை கடந்த வெண்மை. கேட்பானேன், இந்தியாவின் தலைசிறந்த ரகம்: ஸூப்பர் ஸர்ஃப்!

**ஒப்பற்ற வெள்ளைவெளேர் சலவைக்கே ஸூப்பர் ஸர்ஃப்**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

லிண்டாஸ்-SU. 116-140 TH

# சத்திய வெள்ளம்

## நா. பார்த்தசாரதி

### இருபத்தைந்தாவது அத்தியாயம்

**பி**ன்னால் தங்களை அடுத்து வருகிற மாணவர்கள் அந்தக் கடை திறந்திருப்பதைப் பொறுத்துக் கொள்ளமாட்டார்கள் என்று புரிந்துகொண்டு அதை அடைக்கச் செய்யும் பணியை மாணவிகள் தாங்களே செய்யாமல் மாணவர்களுக்கு மீதம் விட்டுச் சென்றனர். அவ்வளவு பெரிய கடை வீதியில் அந்த 'அறிஞர் கலைஞர் சுவை நீர் அங்காடி'க்காரர் மட்டும் திமிராகவும் அலட்சியமாகவும் கடையைத் திறந்து வைத்து நடத்திக் கொண்டிருந்தது உள்ளம் குமுறச் செய்வதாக இருந்தது. முதலில் அணிவகுத்து வந்த மாணவிகளை அடுத்து மாணவர்கள் அந்த இடத்துக்கு வந்தபோது கதிரேசனும் நாலைந்து நண்பர்களும் போய்க் கடையை அடைக்கும்படி மிகவும் மரியாதையான வார்த்தைகளாலேயே வேண்டினார்கள். கதிரேசனுடைய வேண்டுகோளுக்கு நேரடியாக மறுமொழி சொல்லாமல், ''டேய்! டோப்பாத் தலையா! இந்தத் தலைமயிரையும் கிருதாவையும் காமிச்சு எங்களை மிரட்டலாம்னு பார்க்கிறே? மரியாதையா வெளியே போறியா, இல்லே...? வாலை ஒட்ட நறுக்கி அனுப்பி வைக்கட்டுமா?'' என்று சண்டைக்கு இழுத்தான் கடையிலிருந்த முரடன் ஒருவன். அவ்வளவுதான்! ஏற்கெனவே சூடு ஏறியிருந்த கதிரேசனுக்கு அதைக் கேட்டு இரத்தம் கொதித்தது. 'இன்று கடையை அடைப்பவர்கள் என்றுமே திறக்க முடியாமற் போகும்! ஜாக்கிரதை!' என்று மல்லை இராவணசாமி கட்சியினர் போட்டியாக அச்சிட்டு ஒட்டிய விஷமத்தனமான சுவரொட்டி ஒன்றும் அந்தக் கடை முகப்பில் ஒட்டப்பட்டிருப்பதைப் பார்த்ததும் மாணவர்களின் கோபம் இன்னும் அடக்க முடியாததாகிவிட்டது. அதே நேரத்துக்கு ஏற்கெனவே திட்டமிட்டு வைத்திருந்து தயாராகக் காத்திருந்து தாக்குவது போல் அந்த ஹோட்டல் மாடியிலிருந்து கீழே நின்ற மாணவர்கள் மேல் சோடாப்புட்டிகளும், இராவகப் பல்புகளும் வீசப்பட்டன. ஹோட்டல் மாடியிலிருந்து சோடாப் புட்டிகளும், இராவகப் பல்புகளும் வீசப்படுவதையும், மாணவர்களில் சிலர் அலறியபடி குருதி ஒழுக நிற்பதையும் பாண்டியன் போலீஸாருக்குச் சுட்டிக் காட்டியும் பயனில்லை. அந்த ஹோட்டல் எல்லைக்குள் நுழைந்து அங்கே மறைந்திருந்து வன்முறைகள் புரியும் சமூக விரோதிகளை விரட்டிப் பிடிக்காமல் போலீஸார் மரங்களாக நிற்பதைப் பார்த்து மாணவர்களுக்கு மேலும் ஆத்திரம் மூண்டது. தங்களைத் தாங்களே பாதுகாத்துக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லாத மாணவர்கள் பெருங்கூட்டமாக உடனே அந்த ஹோட்டலில் புகுந்து விட்டனர். உடனே பெருங் கலவரம் மூண்டது. ஹோட்டல் முகப்புக் கண்ணாடிகள், கிளாஸ்கள், மேஜை நாற்காலிகள் எல்லாம் தவிடுபொடியாயின. அப்போதும் விடாமல் டீக்கடை பாய்லர் வெந்நீரை மாணவர்கள் மேல் வீசி ஊற்றினார்கள் கடையினுள்ளே இருந்த முரடர்கள். மாணவர்களும் விடவில்லை. மாடியில் ஏறி அங்கே ஒளிந்திருந்து சோடா பாட்டில்களையும். இராவகப் பல்புகளையும் வீசிக் கொண்டிருந்தவர்களை மாணவர்கள் கையும் களவுமாகப் பிடித்து விட்டார்கள். ஏராளமான சோடா பாட்டில்களையும், இராவகப் புட்டிகளையும் அங்கே பதுக்கி வைத்திருந்ததையும் மாணவர்கள் கண்டுபிடித்து விட்டார்கள்.

ஹோட்டல் மாடியில் தங்களிடம் பிடிபட்ட குண்டர்களைத் தரதரவென்று நடு வீதி வரை இழுத்து வந்து போலீஸாரைக் கூப்பிட்டு அவர்களிடம் ஒப்படைத்தார்கள் மாணவர்கள். ஹோட்டல் முள்கரண்டி (ஃபோர்க்)யால் ஒரு முரடன் கதிரேசனின் விலாவில் குத்தியிருந்தான். இராவகப் பல்பு, சோடாப்புட்டி வீச்சில் சில மாணவர்கள் காயமடைந்திருந்தார்கள். இரண்டொரு ஆசிரியர்களும் விரிவுரையாளர்களும்கூடக் காயமுற்றிருந்தனர். இதையெல்லாம் பார்த்துக் கொதிப்படைந்த பொதுமக்களும், தொழிலாளிகளும் அந்தக் கடையைத் தரைமட்டமாக்கும் வெறியோடு உள்ளே புகுந்து

தாக்கத் தொடங்கினார்கள். அதுவரை சும்மா இருந்த போலீஸ் அப்போது வந்து கலைத்திராவிட்டால் அந்தக் கடை பிழைத்திருக்க முடியாது. இதற்குள் ஊர்வலத்தின் முன் பகுதியில் இருந்த மாணவிகளும் இரண்டு மூன்று வரிசை மாணவர்களும், போலீஸ் அலுவலக வாசலிலேயே தடுத்து நிறுத்தப்பட்டு நின்றார்கள். ஊர்வலத்தின் பிற்பகுதியில் ஹோட்டல் வாயிலில் மூண்ட கலவரம் இன்னும் இங்கே இவர்களுக்குத் தெரியாமலே இருந்தது. ஆகவே இவர்கள் அமைதியாக அட்டைகளைப் பிடித்தபடி எதிர்ப்புக் கோஷங்களை முழக்கிக் கொண்டு நின்றார்கள். ஆர்.டி.ஓ. அலுவலகத்துக்கு மகஜரை எடுத்துக் கொண்டு போய்க் கொடுக்க வேண்டிய பாண்டியன், மோகன்தாஸ், கதிரேசன் முதலியவர்கள் இன்னும் ஊர்வலத்தின் முன்பகுதிக்கு வந்து சேராததால் காலங் கடந்து கொண்டிருந்தது.

சிறிது நேரத்தில் ஹோட்டல் வாயிலில் நடந்த கலவரமும், அதனால் காயமும், அடி உதைகளும் பட்ட மாணவர்கள் ஆம்புலன்ஸில் ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லப்பட்டுக் கொண்டிருப்பதும் ஊர்வலத்தின் முன் பகுதிக்கும் பரவியது. ஊர்வலத்தின் பிற்பகுதி இன்னும் வந்து சேராததன் காரணம் இப்போது இவர்களுக்கு மெல்ல மெல்லப் புரிந்தது. டீக்கடை பாய்லர் கொதிநீரை டம்ளர்களில் வாரி மாணவர்கள் மேலே வீசி ஊற்றியபோதும், கடை முரடன் ஒருவன் முள் கரண்டியால் கதிரேசனை விலாவில் குத்தியபோதும், சோடா புட்டி ஆஸிட் பல்பு வீச்சின்போதும், போலீஸ் சும்மா பார்த்துக் கொண்டு நின்றது என்ற செய்தி பரவியதும் மாணவிகளை அடுத்து நின்ற மாணவர்களில் சிலர், ''மேரி தங்கம் மாண்டது போதாதா? இன்னும் எத்தனை பேரைக் கொல்லப் போகிறீர்கள்?'' என்று கூப்பாடு போட்டபடி போலீஸ் அலுவலகத்தை நோக்கி முன்னேற முயன்றார்கள். அப்போது சாலையில் ஓரமாகக் குவித்திருந்த சரளைக் கற்கள் மாணவர்களின் பார்வையில் பட்டது. தங்களுக்குப் பாதுகாப்புத் தராத போலீஸின் மேல் ஆத்திரம் அடைந்த அவர்கள் கல் வீச்சில் இறங்கினார்கள். போலீஸ் அலுவலகத்தை நோக்கிச் சரமாரியாகக் கற்கள் பறந்தன. பஜார் ரோட்டில் ஹோட்டல் வாயிலில் நடந்த சோடாப் புட்டி வீச்சில் யாரோ ஒரு மாணவன் இறந்து போனதாகவும் அப்போது ஒரு செய்தி வந்து பரவவே முன்வரிசை மாணவர்கள் வெறி கொண்டனர். கால் மணிநேரத்துக்குப் பின் ஊர்வலத்தின் பின்பகுதியினர் வந்தபின்புதான் கல்வீச்சு நின்றது. மாணவர் யாரும் இறக்கவில்லை என்ற உண்மையைப் பாண்டியனே வந்து தெரிவித்தபின்புதான் இவர்கள் நம்பினார்கள். எனினும் ஹோட்டல் முரடன் கதிரேசனைக் குத்திவிட்டான் என்பது அவர்கள் கோபத்தை மிகவும் கிளறுவதற்குப்போதுமானதாயிருந்தது.

பாண்டியன் முதலிய மாணவர்கள் மகஜரை எடுத்துக் கொண்டு அதைக் கொடுப்பதற்காக ஆர்.டி.ஓ. அலுவலகத்துக்குள் சென்றிருந்த பொழுது போலீஸ் நிலையத்துக்குள்ளிருந்து அதே பழைய ஜீப்பில் மல்லை இராவணசாமியும், கோட்டம் குருசாமியும் வெளிவரவே வெளியே நின்றிருந்தவர்களிடம் தாங்க முடியாத ஆத்திரம் மூண்டது. ஜீப் மறிக்கப்பட்டது. கூட்டத்திலிருந்து யாரோ கழற்றி எறிந்த செருப்புக்கள் ஜீப்பின் மேல் வந்து விழுந்தன. அதைத் தொடர்ந்து பல செருப்புக்களும், சரமாரியாகக் கற்களும் ஜீப்பின் மேல் விழவே நிலைமை தீவிரமாகியது. ஜீப்பில் இருந்த கட்சி ஆட்கள் இருவருடைய தலையீட்டால்தான் போலீஸே தவறாக நடக்கிறது என்ற எண்ணம் எல்லாருக்கும் இருந்ததனால்தான் ஒரு தவிர்க்க முடியாத உணர்ச்சிக் கொந்தளிப்பு ஏற்பட்டது. ஜீப்பும் அதிலிருந்த ஆட்களும் கூட்டத்தின் நடுவே சிக்கிக் கொண்டதை அடுத்து முன் எச்சரிக்கையில்லாமல் யாரும் எதிர்பாராதவிதமாகப் போலீஸார் கூட்டத்தில் தடியடிப் பிரயோகம் செய்யத் தொடங்கினர். ஆத்திரம் அடைந்த மாணவர்களில் சிலர், போலீஸார் மேலேயே கல்லெறியத் தொடங்கினார்கள். போலீஸாரின் திடீர்த் தாக்குதலால் மாணவிகள் நிலைகுலைந்து ஓடத் தொடங்கியதால் அவர்களிலும் சிலர் காயமடைய நேரிட்டது. தடியடிப் பிரயோகமும் வரம்பு மீறி நடந்தது. மூக்கு முகம் பாராமல் மாணவர்களை அடித்துத் தள்ளினார்கள் போலீஸார். தன்னுடைய ஹோட்டலுக்குப் பெருஞ் சேதம் விளைந்திருக்கிறது என்பதை அறிந்து கொண்ட சினத்தாலும், தானும் இராவணசாமியும் அமர்ந்திருந்த ஜீப்பின் மேல் செருப்பு வீச்சு, கல் வீச்சு நடைபெற்ற அவமானத்தினாலும் கோட்டச் செயலாளர், அருகே இருந்த போலீஸ் இன்ஸ்பெக்டரைக்

கூப்பிட்டுத் தூண்டியதால்தான் தடியடிப் பிரயோகமே நடந்ததாக மாணவர்களிடையே செய்தி பரவிவிட்டது. ஹோட்டல் வாசலில் காயமுற்றிருந்த மாணவர்கள் ஏற்கனவே ஆம்புலன்ஸ் மூலம் ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோகப் பட்டிருந்தது தவிர இப்போது தடியடிப் பிரயோகத்தினால் வேறு நாற்பது நாற்பத்தைந்து மாணவர்களுக்கு மேல் ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோக வேண்டிய நிலையில் இருந்தனர். ஆனால் ஆம்புலன்ஸோ, போலீஸ் வேனோ உடன் கிடைக்கவில்லை. கண்ணுக்கினியாளும், மருத்துவக் கல்லூரி மாணவிகளும் எதிரே இருந்த தொழிற்சாலை ஒன்றிலிருந்து முதலுதவிப் பெட்டிகளை வரவழைத்துக் காயம் பட்ட மாணவர்களுக்குச் சிகிச்சை செய்யத் தொடங்கி விட்டார்கள். மரத்தடிகளிலும், பிளாட்பாரத்து ஓரங்களிலும், அடிபட்ட மாணவர்களுக்குச் சிகிச்சை செய்து காயங்களுக்குக் கட்டுப் போட்டுக் கொண்டிருந்தபோது மகஜர் கொடுப்பதற்காக ஆர். டி. ஓ. அலுவலகம் சென்றிருந்த பாண்டியன் முதலியவர்கள் திரும்பி வந்தார்கள். நடந்தவற்றை அறிந்து சினத்தோடு போலீஸ் தலைமை அலுவலகத்தில் புகுந்த அவர்களைச் சந்திக்கவோ, பேசவோ மறுத்தார் அங்கிருந்த போலீஸ் அதிகாரி. மனிதாபிமான நோக்கமோ, கருணையோ, அன்புள்ளமோ இல்லாத அந்த வறட்டு அதிகார வர்க்கத்தைப் பொறுத்துக் கொள்ள முடியாமல் இளம் உள்ளங்கள் குமுறின. அவர்கள் கண் முன்பாகவே அப்போது அங்கு இன்னொரு நாடகமும் நடந்தது. போலீஸ் அலுவலக காம்பவுண்டுக்குள் நின்று கொண்டிருந்த ஒரு ஜீப்பில் பெட்ரோலை ஊற்றி அங்கிருந்த போலீஸ்காரர்கள் சிலரே அதற்கு நெருப்பு வைத்தனர்.

''அவர்களே ஜீப்புக்கு நெருப்பு வைத்துவிட்டு நம் தலையில் பழியைப் போடப் போகிறார்கள். 'நாங்களாக மாணவர்கள் மேல் தடியடிப் பிரயோகம் செய்யவில்லை. அவர்கள் ஸ்டேஷனுக்குள் அத்துமீறிப் புகுந்து ஜீப்புக்கு நெருப்பு வைத்ததால்தான் நாங்கள் தடியடிப் பிரயோகம் செய்ய நேரிட்டது' என்று போலீஸ் தரப்பிலிருந்து வெளியிடப்படும் செய்தி நாளைக் காலைப் பத்திரிகைகளில் வரும்.



அதிகாரிகள் என்பவர்கள் இப்போதெல்லாம் தவறுகளைச் செய்யாமலிருக்க முயலுவதில்லை. பல சமயங்களில் செய்து விட்ட தவறுகளை நியாயப்படுத்தவே அதிகமாக முயலுகிறார்கள் அவர்கள். பதவியில் உள்ளவர்களின் போக்கு அவர்களை அப்படிப் பழக்கப்படுத்தி வைத்து விட்டது. சட்டம் ஒழுங்கைப் பாதுகாக்க வேண்டிய போலீஸார் ஆளும் கட்சிப் பிரமுகர்களின் கைக்கூலிகள்போல் ஆகி விட்டிருக்கிறார்கள்'' என்று மோகன் தாஸ் அதைச் சுட்டிக்காட்டிப் பாண்டியனிடமும் மற்ற மாணவர்களிடமும் சொன்னான். கையில் காமிராவோடு வந்திருந்த ஒரு மாணவன் போலீஸாரே ஜீப்புக்குத் தீ வைக்கும் காட்சியைப் படம் எடுக்க முற்பட்டபோது அந்தக் காமிரா போலீஸாரால் தட்டிப் பறிக்கப்பட்டது. அதிலிருந்து பிலிம் சுருளை எடுத்த பின்புதான் காமிராவையே திரும்பக் கொடுத்தார்கள். தடியடிப் பிரயோகம், காயமடைந்த மாணவர்களின் நிலை, ஆம்புலன்ஸோ, போலீஸ் வேனோ கிடைக்காததால், நடுத் தெருவிலேயே அவர்களுக்குச் சிகிச்சை செய்ய முயன்ற மாணவிகளின் சிரமம் எல்லாவற்றையும் பார்த்து ஊர்வலத்தில் வந்த ஆயிரக்கணக்கான பொதுமக்களும், ஆசிரியர்களும், தொழிலாளிகளும் உணர்ச்சி வசப்பட்டார்கள். அந்த மக்கள் வெள்ளம் அப்போது ஒன்றுயிருந்தால் என்னென்ன நேருமோ என்று பயந்து மெல்ல மெல்லக் கூட்டத்தைக் கலைத்தார்கள் போலீஸார்.

நெடு நேரத்துக்குப் பின்பே காயமுற்ற மாணவர்களை ஆஸ்பத்திரிக்கு அழைத்துப் போக ஆம்புலன்ஸ், வேன் எல்லாம் வந்தன. ஆஸ்பத்திரியிலும் ஒரு தந்திரம் கையாளப்பட்டது. நாற்பத்தைந்து மாணவர்களில் முப்பது பேருக்கு மேல் வார்டில் அனுமதித்துச் சிகிச்சை அளிக்கப்பட வேண்டிய நிலையில் இருந்தும்கூட அப்படிச் செய்யாமல் எல்லோரையும் உடனே, எதையோ சிகிச்சை என்ற பேரில் முடித்து வெளியே அனுப்பிவிட முயன்றார்கள். பத்திரிகை நிருபர்களோ, பொது மக்களோ வந்து பார்க்கும்படியும், பிற மாணவர்கள் காணும்படியும் வார்டில் மாணவர்கள் யாருமே தங்கிச் சிகிச்சை பெறாமல் பார்த்துக் கொண்டார்கள். யாருக்கும் எதுவும் அதிகச் சேதமில்லை என்று சொல்லவும் இது பயன்படும் என்று நினைத்தார் ஆர். டி. ஓ. ஆஸ்பத்திரி வார்டில் இருந்த டாக்டர்களுக்கும் கூடப் போலீஸாரும் ஆர். டி. ஓ. வும் இப்படிக் கூத்தடித்தது பிடிக்கவில்லை. அவர்களுடைய அநுதாபமும், இரக்கமும் மாணவர்கள் மேலும் பேராசிரியர்கள் மேலுமே இருந்தன. இன்னும் பத்து நாட்கள் தங்கிச் சிகிச்சை பெறவேண்டிய அளவு ஸீரியஸான நிலையிலிருந்த மாணவன் கூடச் சிகிச்சைக்குப் பின் உடனே விடுதிக்குத் திருப்பி அனுப்பப்பட்டான். 'தடியடிப் பிரயோகத்தில் காயமுற்ற இத்தனை மாணவர்கள் ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்று வருகின்றனர்' என்பதாக எந்தப் பத்திரிகையிலும் செய்தி வந்து விடக் கூடாதே என்பதற்காகத்தான் இது நடந்தது என்பதை எல்லாருமே புரிந்து கொண்டனர். எதிர்க்கட்சி பத்திரிகைகளில் இப்படி மாணவர்கள் ஆஸ்பத்திரியில் தங்கிச் சிகிச்சை பெறாமல் துரத்தப்பட்டது பற்றியும் செய்தி வெளி வர ஏற்பாடு செய்தான் பாண்டியன். திராவக வீச்சிலும், பஜார் ரோடு ஹோட்டல் கலவரத்தின் போதும் காயமுற்ற கதிரேசன் முதலியவர்களுக்குத் தனியார் மருத்துவமனை ஒன்றில் சிகிச்சைக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அண்ணாச்சி அருகேயிருந்து கதிரேசனையும் மற்ற மாணவர்களையும் கவனித்துக்கொண்டார். பாண்டியனும் அவ்வப்போது போய்க் கவனித்தான். காலாண்டு விடுமுறைக்குப்பின் பல்கலைக் கழகம் திறந்த முதல் தினத்தன்று அவர்கள் நடத்திய இந்த ஊர்வலமும் போராட்டமும் வெற்றி பெற்றன. மறு நாள் காலைப் பத்திரிகையிலேயே அவர்கள் எதிர்பார்த்தபடி நடந்திருந்தது. பாலேஸ்வரியிடமும் பேராசிரியர் ஸ்ரீராமனிடமும் முறை தவறி நடந்து கொண்ட போலீஸ் இன்ஸ்பெக்டர் சஸ்பெண்ட் செய்யப்பட்டிருந்தார். அரசாங்கம் விசாரணைக்கு உத்தரவிட்டிருந்தது. பல்கலைக் கழகம் திறந்தவுடனே முதல் வாரத்துக்குள் இருக்கும் என்று எதிர்பார்த்த பட்டமளிப்பு விழாவை இன்னும் பதினைந்து நாட்களுக்குத் தள்ளிப் போட்டிருந்தார் துணைவேந்தர். அமைச்சர் கரியமாணிக்கம் டாக்டர் பட்டம் பெற இருப்பதனாலும், பட்டமளிப்பு விழாப் பேருரை நிகழ்த்த இருப்பதாலும் மாணவர்கள் அதை எதிர்த்து ஏதாவது செய்யக் கூடும் என்ற சந்தேகம் துணைவேந்தருக்கு இருந்தது. சிண்டிகேட் உறுப்பினர் ஆனந்தவேலுவோ துணைவேந்தரை நெருக்கு நெருக்கென்று அவசரப்படுத்திக் கொண்டிருந்தார். பட்டமளிப்பு விழா தாமதமாகத் தாமதமாக அமைச்சரிடம் தமக்கு ஆக வேண்டிய காரியமும் தாமதமாகுமே என்று

## உறுதியான கட்டடங்கள்: கிராமங்களில் - 2









மலிவுவிலை வீடு

கிராமங்களில் ஒரு புதிய புரட்சி

# சங்கர் சிமெண்ட்



பாறை போன்று உறுதி நிலைத்திருக்கக் கூடியது

**ISI** மார்க்குடன் உத்தரவாதம் உள்ளது



இந்தியா சிமெண்ட்ஸ் லிமிடெட், தன் பில்டிங், சென்னை-2

IC-1445TH

**25 ஆண்டுகளுக்கு மேல் நிலைத்து — இன்னும் வளர்ந்துகொண்டே போகிறது!**

இலவச தொழில்நுட்ப ஆலோசனைக்கு: சிமெண்ட் சர்வீஸ் பீரோ, 'குரோவ்' சென்னை-18

பயந்து பதறினார் எஸ்டேட் அதிபர் ஆனந்தவேலு.

மாணவர்களின் கண்டன ஊர்வலமும், கடையடைப்பும் நடந்த தினத்துக்கு மறுநாள் பல்கலைக் கழக வகுப்புக்கள் எப்போதும்போல் நடைபெற்றன. மாணவர்கள் வகுப்புக்களுக்குச் சென்றனர். பல பத்திரிகைகள் தங்கள் கோரிக்கைகளின் நியாயங்களை எடுத்து எழுதியிருந்ததாலும், அரசாங்கம் நீதி விசாரணைக்கு உத்தரவிட்டிருந்ததாலும் மாணவியிடமும், பேராசிரியரிடமும், தவறாக நடந்து கொண்ட இன்ஸ்பெக்டர் 'சஸ்பெண்ட்' செய்யப்பட்டிருந்ததாலும் இரண்டாம் நாள் வகுப்புக்களைப் புறக்கணிக்க விரும்பவில்லை அவர்கள். எனவே, அன்று பல்கலைக் கழகம் அமைதியாக நடந்தது. பிற்பகல் மூன்று மணிக்கு மோகன்தாஸையும், பாண்டியனையும் துணைவேந்தர் எதற்கோ கூப்பிட்டு அனுப்பினார். அவர்கள் இருவரும் அவரைக் காணச் சென்றபோது அவர் காப்பி பருகிக் கொண்டிருந்தார். பியூனைக் கூப்பிட்டு அவர்களுக்கும் பிளாஸ்கிலிருந்து காப்பி ஊற்றிக் கொடுக்கச் சொல்லி உபசரித்தார் அவர். அந்த உபசாரம் புதுமையாக இருந்தது.

''பட்டமளிப்பு விழா எல்லாம் வருகிறது. மாணவர்கள் எல்லாரும் ஒற்றுமையாயிருந்து யூனிவர்ஸிடியின் நற்பெயரைக் காப்பாற்றணும். பரஸ்பரம் நாம் ஒருவருக்கொருவர் புரிந்து கொள்ள வேணும். மிஸ்அண்டர்ஸ்டாண்டிங் எதுவும் கூடாது'' என்று துணைவேந்தர் தொடங்கிய போது அதற்கு என்ன மறுமொழி கூறுவது என்பது புரியாமல் பாண்டியனும், மோகன்தாஸும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர். பட்டமளிப்பு விழாவின்போது மாணவர்கள் போராடுவார்களா இல்லையா என்பதை மிகவும் தந்திரமாகத் தங்களிடமிருந்து அவர் அறிந்து கொள்ள முயல்வது அவர்களுக்குப் புரிந்தது. 'எதையும் சொல்லி விடாதே' என்பது குறித்துப் பாண்டியன் மோகன்தாஸின் காலை மிதித்து நினைவூட்டினான். மோகன்தாஸ் உஷாரானான். அவர்களிடமிருந்து எதையும் அவரால் அறிந்துகொள்ள முடியவில்லை. பேச்சை வேறு திசைக்கு மாற்றி ஹாஸ்டல் வசதிகள், உணவு, விடுதிகள் பற்றி அவர்களை மிகவும் அக்கறையாகக் கேட்டார் துணைவேந்தர்.

''ஏதாவது குறைகள் இருந்தால் என்னிடம் நீங்கள் உடனே தயங்காமல் சொல்ல வேண்டும்'' என்றார். வழக்கத்தை மீறிய சுபாவத்தோடு அவர் பேசியது அவர்களுக்குப் புதுமையாயிருந்தது. ஜாடைமாடையாக எதை அவர் தங்களிடமிருந்து தெரிந்து கொள்ள முயன்றாரோ, அதைத் தவிர மற்ற எல்லாப் பதில்களையும் அவருக்குச் சொன்னார்கள் பாண்டியனும், மோகன்தாஸும்.

''முன் வருடங்களில் செய்ததுபோல் பட்டம் பெறும் மாணவர்களைத் தவிர நம் யூனிவர்ஸிடியில் இப்போது படித்துக் கொண்டிருக்கும் மாணவர்களுக்கும் பட்டமளிப்பு விழாப் பேருரையைக் கேட்பதற்குப் பாஸ்கள் தருவதை நிறுத்திவிட நினைக்கிறேன். உங்கள் அபிப்பிராயம் என்ன? பட்டம் பெற



## சத்திய வெள்ளம்

**அதிகாரிகள் என்பவர்கள் இப்போதெல்லாம் தவறுகளைச் செய்யாமலே இருக்க முயலுவதில்லை. பல சமயங்களில் செய்துவிட்ட தவறுகளை நியாயப்படுத்தவே முயன்று கொண்டிருக்கிறார்கள்.** ★

வருகிற மாணவர்களின் கூட்டமே அதிகம். ஹாலில் இடமோ ரொம்பக் குறைவு. பட்டம் பெறாமல் இப்போது இங்கே படிக்கிற நீங்களெல்லாம் போய் அங்கே அடைத்துக் கொள்ளாது இருந்தால் பட்டம் பெற வருகிறவர்களாவது தாராளமாக உட்கார முடியும் அல்லவா?''

''சௌகரியம் போல் செய்யுங்கள், சார்! இட வசதி எப்படியோ அப்படித் தானே நீங்கள் ஏற்பாடு செய்யலாம்?'' என்று இதற்கு மறுமொழி கூறும் போதும் பட்டுக் கொள்ளாமல் மறுமொழி கூறினார்கள் அவர்கள். பட்டமளிப்பு விழாவின்போது மாணவர்கள் பட்டமளிப்பு விழா மண்டபத்துக்குள் வருவதற்குப் பாஸ் வேண்டும் என்ப

நஷ்டம் வராமல்

என்ன செய்யும்?




கோலார் தங்க வயலில் தினம் வெட்டி எடுக்கப்படும் பாறையின் எடை 1800 டன். இதிலிருந்து எடுக்கப்படும் தங்கத்தின் அளவு 5 கிராம்.

ஹிந்துஸ்தான் டைம்ஸ் — 'பாலி'

தில் பிடிவாதமாக இருந்தார்களானல் அந்தப் பிடிவாதத்தை வைத்தே அவர்களுடைய உள்நோக்கத்தைக் கண்டு பிடித்துவிடலாம் என்று முயன்ற போதும் துணைவேந்தர் தோற்ருர். அதன் மூலமும் தங்கள் நோக்கம் அவருக்குத் தெரியவிடாமல் காத்துக் கொண்டு விட்டார்கள் மாணவர்கள். சி. ஐ. டி. ரிப்போர்ட் மூலம் மந்திரிக்குத் தெரிந்து மந்திரி துணைவேந்தரைக் குடைந்தும் துணைவேந்தரால் மாணவர்கள் பட்டமளிப்பு விழாவின்போது தகராறு செய்வார்களா இல்லையா என்பதைக் கண்டுபிடிக்க முடியாமல் இருந்தது. அரை மணி நேரம் அவர் முன்னிலையில் நடித்துவிட்டுப் பின்பு மெல்ல விடைபெற்று எழுந்து வந்தார்கள் பாண்டியனும் மோகன்தாஸும். இது நடந்த மறு நாள் காலை பத்தரை மணிக்கு வகுப்புக்காகப் போய்க் கொண்டிருந்த பாண்டியனைப் பல்கலைக் கழக மைதானத்தில் உள்ளூர் மாணவி ஒருத்தியையும் உடன் அழைத்துக் கொண்டு வந்து பாதி வழியில் சந்தித்தாள் கண்ணுக்கினியாள். எதிரே அவர்களைக் கண்டதும் பாண்டியன் தயங்கி நின்ருன்.

கண்ணுக்கினியாள் சொன்னுள்: "இவள் பி. எஸ்ஸி. முதல் வருடம் படிக்கிருள். பெயர் பத்மா. ஊருக்குள்ளிருந்து தினம் டவுன் பஸ்ஸில் இங்கே வருகிருள். ஊருக்குள்ளிருந்து யூனிவர்ஸிடிக்கு வரும் டவுன் பஸ்களின் ரூட் உரிமையாளர் இராவணசாமி என்பது உங்களுக்குத் தெரியும். பத்து நாட்களாக இவள் வருகிற காலை 9-45 பஸ்ஸில் யாரோ ஒரு புதுக் கண்டக்டர் இவளோடு தகராறு செய்கிருனும். தோள் பட்டையில் இடிப்பது, டிக்கட் கொடுக்கும் போது கையில் தொட்டு அழுத்திக் கொடுப்பது, மேலே இடிப்பது, சாய்வது போல் என்னென்னமோ வம்பெல்லாம் பண்ணுகிருனும். இவள் பயத்திலும் கூச்சத்திலும் பொறுத்துக் கொண்டிருக்கிருள். இன்றைக்குத்தான் என்னிடம் சொன்னுள். அந்தக் கண்டக்டருக்கு நாம் எப்படிப் புத்தி புகட்டுவது?"

"ஒரு காரியம் செய்யேன்! நாளைக் காலையில் எட்டரை மணிக்கு வார்டனிடம் அனுமதி வாங்கிக் கொண்டு நீ இவள் புறப்படுகிற இடத்துக்குப் போய் இவளுடனேயே பஸ்ஸில் அங்கிருந்து புறப்பட்டுவா. பத்து மணிக்கு அந்த பஸ் இங்கே யூனிவர்ஸிடி டெர்மினஸ்ஸில் வந்து நிற்கிற இடத்திலே நானும் நாலைந்து மாணவர்களும் தயாராகக் காத்திருக்கிருேம். கோளாருக ஏதாவது நடந்திருந்தால் எங்ககிட்டச் சொல்லு. அப்பவே அங்கேயே அந்தக் கண்டக்டரிடம் விசாரிக்கிருேம். அவன் தன்னுடை தப்பை ஒப்புக்கொண்டு 'இனிமே அப்பிடி நடக்கலே'ன்னு மன்னிப்புக் கேட்டா விட்டுவிடலாம். இல்லேன்னு அவனைக் கவனிக்கிற விதமாக் கவனிப்போம். நாளைக்குக் காலையிலே நீ அங்கே போகணும். போறியா?" என்ருன் பாண்டியன்.

கண்ணுக்கினியாளும் அவன் கூறிய படியே செய்ய இணங்கிருள். கண்ணுக்கினியாளை நோக்கிக் கூச்சத்தோடும் பயத்தோடும், "இதெல்லாம் வேண்டாம். என்னுலே உனக்கெதுக்கு வீண் சிரமம்?" என்று ஒதுங்க முயன்ருள் அந்தப் பெண் பத்மா.

"இப்பிடிக் கூசி ஒதுங்கினல் பயனில்லை. ஒதுங்குகிறவர்கள் எதிலும் ஒதுக்கப்படும் காலம் இது. பொறுத்துக் கொள்கிறவர்களின் பொறுமையே மேலும் மேலும் சோதிக்கப்படுகிற காலத்தில் பொறுமையைக் கடைப்பிடிப்பது தவிரப் பொறுமையைக் கைவிடவும் நமக்குத் தெரிய வேண்டும்" என்று உடனே பாண்டியன் முன்னிலையில் அவளைக் கண்டித்தாள் கண்ணுக்கினியாள்.

(தொடரும்)

# மனம் ஒன்றினால்...

அட்டைப் படக் கதை

எஸ். லட்சுமி சுப்பிரமணியம்

எங்கேயோ ஞாபகமாகச் சாலையைக் கடக்கும் இடத்தில் வந்து நின்று கொண்டிருந்தான் ரகுநாத். கன்னாட் சதுக்கத்தில் மும்முரமான மூலை அது.

''கிரீன் லைட் — கிராஸ்!''

பக்கத்தில் யாரோ சொன்ன குரல் அவனை உலுக்கி எழுப்பிற்று. அவன் அவசரமாகப் புறப்படுவதற்கு முன்னால் அந்தப் பெண்ணின் குரல் காதில் விழுந்தது.

''இந்த வயதானவரைக் கையைப் பிடித்து அந்தப் பக்கம் கொண்டு போய்விட்டு விடுகிறீர்களா? ப்ளீஸ்....'' அவள் குரல் வேண்டுவதைப் போல இல்லை. இளகும் அவன் பார்வையைப் புரிந்துகொண்டு மறுக்க முடியாமல் ஒப்புக் கொள்ள வைப்பதைப்போலத்தான் இருந்தது. அவனையும் அறியாமல் அவன் பார்வை பணிந்தது.

''யெஸ்—'' என்று அவருடைய கையைப் பிடித்துக் கொண்டான். ''தாங்க்யூ'' என்று சொன்னபோது இதழ்களில் ஒளிந்து கொண்டிருந்த புன்னகை விரிந்து, முல்லைப் பற்களின் வரிசை கூடத் தெரிந்தது. சித்திரம் எழுதும் அவனையே ஒரு கணம் மயங்க வைக்கும் முகம். கண்மேல் வழியும் மயிர்ச் சரடுகளில் ஒளி ஒளிந்து விளையாடிற்று.

சாலையைக் கடந்து வந்து கரையேறியதும் அவன் திரும்பிப் பார்த்தான். அவளைக் காணோம். கடல் போன்ற கூட்டத்தில் அவள் எங்கேயோ கலந்து விட்டாள். பெரியவரை அனுப்பிவிட்டு அவன் மேலே நடந்தான். 'ஈவினிங் நியூஸ்' என்று கத்தும் பையன்கள், ரீகல் தியேட்டரிலிருந்து தேன்கூட்டைக் கலைத்தாற்போல வெளிப்பட்ட மக்கள், பக்கத்தில் 'டிஸ்கொதே'யில் சேர்ந்துகொள்ளப் போய்க் கொண்டிருந்த பஞ்சாபிப் பெண்கள் யாருமே கண்ணில் படவில்லை. அந்த முகம் மட்டும்தான் தெரிந்தது.

டில்லிக்கு அவன் வந்து நான்கு ஆண்டுகளுக்கு மேல் ஆயிற்று. ஒரு விளம்பரக் கம்பெனியில் சித்திரம் வரைந்து 'டிஸைன்' போட்டுக் கொடுக்கும் பணியில் வந்து சேர்ந்து கொண்டான். அப்புறம் அந்த ஆவல் கொஞ்சம் கொஞ்சமாக வளர்ந்து பெருகி விட்டது. இப்பொழுது புத்தகங்களின் அட்டையில், கண்காட்சிகளில், ஓவியப் போட்டிகளில் அவன் கைவண்ணம் தெரிகிறது.

புகழ் பெற்ற ஆசிரியரின் நாவல் ஒன்றுக்காக அவனை அட்டைப் படம் கேட்டிருந்தார்கள். அவனாக வரைந்த இரண்டொரு சித்திரங்கள் அவனுக்குத் திருப்தியாக இல்லை. இப்போது அந்த முகத்தை அட்டைப் படத்துக்காக நினைத்தபோது படபடவென்று இதயம் சிலிர்த்தது. அவள் நடந்து வந்தது, கூட்டத்தையே ஒளிரச் செய்வது போன்ற அவள் அழகு, பின்னந் தலையில் நழுவ நழுவப் போட்டிருந்த ஸில்க் சேலையின் தலைப்பு, மயில் ஒளி தெறிப்பது போன்ற அந்தப் புன்னகை— அவனுடைய சித்திரத்துக்கு உருவம் வந்து விட்டது.

அறையில் உட்கார்ந்து மறுநாள் காலை ஆவி பறக்கும் தேநீரையும் குடிக்க மறந்து, சித்திரம் எழுதிக் கொண்டிருந்தான் ரகு. இன்னும் வண்ணக் கலவைகளைக் குழைக்கவில்லை. பனிர் வெண்மையாக இருந்த, ஊசிகளால் குத்திவைத்த காகிதத்தில் பென்சில் கோடுகள் தாம் விழுந்து முகச் சாயலை எழுப்பிக்கொண்டிருந்தன.

''குட்மார்னிங்!'' என்று சொல்லிக் கொண்டு வந்து முகத்தை முன்புறம் காட்டினான் நண்பன் பிஜ்ஜூ. டில்லிக்கு வந்ததிலிருந்து ஒன்றாகப் பழகியவன் அவன். தேநீரை அவன் கையில் கொடுத்துவிட்டு நிமிர்ந்து உட்கார்ந்தான். சூட்டுக்கேற்ப அளவாகப் பருகியபடி நிமிர்ந்த பிஜ்ஜூவின் பார்வையில் அந்த முகம் விழுந்தது.

''எங்கேயோ பார்த்திருக்கிறேன் இந்தப் பெண்ணை—''

''அப்படியா?'' என்று அவன் முகத்தில் அடையாளம் தெரியும் ஜாடையை ஆவலோடு தேடினான் ரகு. ''பழக்கமான ஒரு களை ததும்பும் முகம். பார்த்த ஞாபகம். இப்போது என் நினைவுக்கு வரவில்லை!'' சற்றும் மின்விசிறி அடங்குவதைப் போல் அந்தப் பார்வையிலும் குரலிலும் அழுத்தம் குறைந்து அடங்கி விட்டது. ரகு விரல்களைச் சொடுக்கி விட்டுக் கொண்டான்.

''நேற்று நான் அவளைப் பார்த்தேன். இந்தச் சித்திரத்துக்கு அந்த முகம்தான் ஓர் 'இன்ஸ்பைரேஷன்'.''

பிஜ்ஜூ அவனைக் கண் கொட்டாமல் பத்து விநாடிகள் பார்த்தான்.

''என்ன அப்படிப் பார்க்கிறாய் பிஜ்ஜூ?''

''நீ இவ்வளவு கெட்டிக்காரனாக ஆகிவிட்டாயே என்றுதான்!''

''ஏன் அப்படிச் சொல்லுகிறாய்?''

''சித்திரம் வரைவதற்காக மட்டும் நீ அந்த முகத்தை நினைவு வைத்துக் கொள்ள வில்லை. அப்படித்தானே?'' ரகு பதில் சொல்ல வில்லை. மறுபடியும் அவன் முகத்தில் புன் முறுவல் தவழ்ந்தது.

பிஜ்ஜு எழுந்து வந்து அவன் தோளின்மேல் கையை வைத்தான். ''சரி, வேலையைப் பார். உன் சித்திரத்தைக் கலைக்க நான் விரும்ப வில்லை. மனத்திலேயும் கூடத்தான்'' என்று சிரித்துக் கொண்டே கதவடியில் விட்டிருந்த காபூலிச் செருப்பை மாட்டிக் கொண்டான்.

நிறுவனத்தின் வேலைநிமித்தம் பம்பாய்க் குப் போக வேண்டி யிருந்தது. விமானத்தில் ஏறி அமர்ந்து புத்தகத்தை எடுத்துப் பிரித் தான். அவன் வரைந்த அட்டைச் சித்திரத் துடன் வெளியாகியிருந்த புதிய புத்தகம் அது.

''காப்பியா? டீயா?''

விமானப் பணிப்பெண்ணின் குரல் கேட் டது. ''காப்பியா? டீயா? நானா?'' என்று ஒரு புத்தகம் அவன் படித்ததுண்டு. இந்தப் பெண்—

அவன் பார்வை நிலைத்தது. அவள்தான்!

''நீங்களா?'' சற்றுத் திகைத்துப் போய் அவளை ஏற இறங்கப் பார்த்தான். அவள் முகத்தில் துளி மாறுதல்கூட இல்லை. தலை குனிந்து சாக்லேட் தட்டை அவன் மடியின் மீது நீட்டினாள்.

''உங்களை எனக்குத் தெரியும். நீங்கள் மிஸ்டர் ரகுநாத்... ஓவியர்.''

''எப்படித் தெரியும்?'' அவன் கண்களில் வியப்பு நிறைந்தது.

''உங்கள் ஓவியக் கண்காட்சி ஒன்றுக்கு வந் திருக்கிறேன். அன்று ஒருமுறை கன்னாட் சதுக்கத்தில் கூடப் பார்த்தேன்.''

அவன் முகம் அவளுக்கும் நினைவிருக் கிறதா? - அன்று அந்தச் சாலைச் சந்திப்பில் பார்த்த அவ்வளவு கூட்டத்துக்குமிடையே?

அவள் திரும்பிப் போய்விட்டாள். அந்த இளநீல நிறச் சேலை. இடுப்பிலிருந்து சிரித்து, இறங்கிய எடுப்பான உயரம், மடிப்பு. அலை யோட அவள் நடந்த விதம்? குழைந்து சிரித்து, தட்டும் கையுமாக நடந்து, ஸீட் பெல்ட்டை அணிந்துகொள்ளும் விதம் எப்படி என்று சொல்லிக் கொடுத்து.... இளமையின் நிறைவின் ஓட்டம் அது; அழகின் துள்ளல்.

பம்பாயை நெருங்குமுன் அவள் மறுபடியும் அவனிடம் வந்தாள். அவன் மடி மீது அவள் பார்க்கும்படி வைத்திருந்த புத்தகத்தின் அட்டையைக் கவனித்தாள். இதழ்களில் முறுவல் கட்டிற்று.

''இந்தப் படத்துக்கு 'மாடல்' நான்தான். அப்படித்தானே ? ம்?''

அவன் தலையை அசைத்தான். அவள் முகத்தில் நாணமும் மகிழ்ச்சியும் குழம்பின. அவள் நகர்ந்து விட்டாள்.

மறுபடியும் அவன்புறமாக வந்து யாரும் பாராதவண்ணம் குனிந்தாள் ஹோ. அவன் மடியின்மீது இரகசியமாக ஒரு சிறு பவுடர்—மேக்கப் டப்பியிலிருக்கக்கூடிய அட்டை விழுந்தது. அவளையே கனிவும் கேள்விக்குறியு மாகப் பார்த்துவிட்டுப் போய்விட்டாள். அட் டையை எடுத்துப் பார்த்தான். பின்புறம் அவளுடைய புதுடில்லி விலாசம் இருந்தது.

பம்பாயில் இருந்த மூன்று நாட்களும் அந்த அட்டை அவன் கோட்டின் உட்புறம் பத்திர மாக இருந்தது. நெஞ்சுக்கு அருகே மணத்துக் கொண்டிருந்தது. அவள் மென் குரலைப்போல் இரகசியம் பேசிக் கொண்டிருந்தது. பகலும் இரவும் ஒளியையும் இருளையும் மாறி மாறிக் கொட்டின. அவன் மனக் கண்ணில் அந்த ஒற்றை நீலப் பூதான் சிரித்துக் கொண்டிருந் தது; கண் சிமிட்டிக் கொண்டிருந்தது. ஒவ் வொரு மணியையும் அவன் எண்ணினான்.

டில்லிக்குத் திரும்பிய விமானத்தில் அவளைக் காணோம். அந்த இரண்டரை மணி நேரப் பிரயாணமும் இருண்டு கிடந்தது.

டில்லியில் அவளைச் சந்தித்தது ஒரு விடு முறை நாளில். இருவருமாக வெளியே போனார்கள். புத்த ஜயந்தி பூங்காவில் புல் தரையில் உட்கார்ந்து மணிக்கணக்காகப் பேசி னார்கள். வெளியிலேதான் உணவு; சிற் றுண்டி எல்லாம். திரும்பும் போது இருள் சரம் இறங்கியது.



ஒரு வீட்டின் மாடி அறை 'போர்ஷன்' அவளுடையது. நாகரிகம் நலுங்கும் பகுதி. அறைக் கதவைத் திறக்கு முன்பே ஒரு கனமான பெரிய 'கவர்' தலை நீட்டிக் கொண்டிருந்தது. ஆச்சரியத்தில் அவள் குழந்தையைப் போலக் கைகளைக் குவித்துக் கொண்டாள். கதவைத் திறந்ததும் அவள் குனிந்து எடுக்கப் போனான்.

சாதாரணமான அளவை மீறிய, பெரிய, கனமான கவர் அது.

''யோசித்துத் திற. அளவையும் கனத்தையும் பார்த்தால் பயமாக இருக்கிறது. உள்ளே 'கடிதாக — வெடிகுண்டு' இருக்குமோ, என்னமோ ?''

அவள் சிரிக்கவில்லை, அவன் சொன்னதைக் கேட்டு. அவளுக்குப் பழக்கமான கையெழுத்துத்தான் அது. அலுவலக விலாசத்துக்குப் போய், முகவரி திருத்தி அங்கே வந்திருந்தது. அவள் குனிந்து எடுத்தாள். அவனும் எடுக்கப் போனான். சின்னக் குழந்தைகளைப் போல் அவர்களுடைய தலைகள் இடித்தன.

''யாரது ?''

''ராஜேஷ்... ஒரு மெக்கானிகல் இஞ்சினியர்...... ஆறு மாதங்களுக்குமுன் ஒரு பயிற்சிக்காக ஜப்பானுக்குப் போனவர்.''

''அவருக்கும் உனக்கும் என்ன சம்பந்தம் கீதா ?''

''எங்களுடைய கல்யாணம் நிச்சயம் ஆகி இருக்கிறது. அவர் திரும்பி வந்த பிறகு நடைபெறுவதாக இருக்கிறது !'' எழுந்து அருகே வந்தாள் கீதா.

பெரிய இரைச்சலுடன் இடி ஒன்று அவன் மனத்துள் இறங்கிக் கொண்டிருந்தது. வெண் கலச் சிலையைப் போல் அவள் நின்றது, அவன் ஆசைகளை யெல்லாம் காலடியில் மிதிப்பது போல் இருந்தது. அவள் மீது தவறு இல்லை. அவன் கேட்டானா அவளிடம்? ஆண்களுடன் வெளியே போவது, பே வது, பழகுவது எல்லாம் அவள் நிலையில் உள்ளவர்களுக்கு சகஜம். அவனுடைய பார்வையும் குரலும் அவனுடைய ஆவலை வெளிப்படுத்தி யிருக்கலாம். ஆனால், அவளுடைய வாழ்க்கையில் அவனுக்கு இடம் இருக்கிறது என்று அவள் சொன்னாளா ?

''நாளைக்கு வருகிறார் ராஜேஷ். பாலம் விமான நிலையத்தில் என்னைச் சந்திக்கச் சொல்லி யிருக்கிறார்.''

அவனுக்கு விடை கொடுப்பது போல் இருந்தது அவள் குரல். இரண்டு மாதங்களுக்கு முன் நேர்ந்த சந்திப்பு. போன வாரம் தோன்றிய நெருக்கம். இன்று ஒரே நாளில் மின்னலைப் போல் மின்னி இருண்டுவிட்ட நிகழ்ச்சி. சட்டென்று உலகம் சோபை யற்றுப் போய்விட்டது அவனுக்கு.

''அப்புறம்.....? நான் போகட்டுமா ?''

அவள் முகத்தில் ஒரு புது ஒளி மிதந்தது. கண்கள் வெறித்தன ஒரு நிமிடம்.

'' நாளைக்கு நீங்களும் வாருங்களேன், விமான நிலையத்துக்கு. கல்கத்தாவிலிருந்து தில்லிக்கு வரும் விமானம். நான் தகவல் தரும் கவுண்டருக்கு அருகே இருப்பேன்.''

இன்னும் அவர்களுக்கிடையே ஒரு தொடர்பா ? என்ன அர்த்தம் அதற்கு ? சாதாரண நட்பு. அடையாளம் கண்டு கொண்டால் தலையை அசைத்துப் புன் சிரிப்பை உதிர்க்கும் நட்பு. அதற்குமேல் அதில் பொருள் ஏதும் இல்லை. அவன் விமான நிலையத்துக்குப் போக வேண்டுமா ? அவளும் ராஜேஷும் சந்திப்பதைச் சாட்சியாக நின்று பார்க்க வேண்டுமா ?

''உங்களை எதிர்பார்த்துக் கொண்டிருப்பேன்.''

அவள் குரல், அவனை அழைத்தவிதம், அவனை இழுப்பது போல் இருந்தது. பார்வையில் அவன் சம்மதத்தைக் காட்டிவிட்டுப் படியிறங்கி வெளியே வந்தான். அவன் மனத்தில் ஒரு சித்திரம். அழகான ஒரு பெண் ஒரு நாணயத்தை மேலே சுண்டிப் போடுகிறாள்; தலையா பூவா என்று பார்க்க; இருபுறமும் தலையே இருக்கும் விநோதமான நாணயங்களும்கூட உண்டு.......

அறைக் கதவை மூடிவிட்டு வெந்நீர் பொழியும் 'ஷவரி'ல் குளிக்கத் தொடங்கினாள் கீதா. மேலே இதமாக விழும் நீரைப் போல் நெஞ்சிலும் மென்மையான நினைவுகள். அவளுடைய தூரத்து உறவு ராஜேஷ். படிப்பிலும் பேச்சிலும் கெட்டிக்காரன். அவனுடைய கவனத்துக்காகக் காத்திருந்த பெண்கள், அவளுடைய தோழிகளில் சிலரும்கூட, எவ்வளவோ பேர்.

அவர்களை இலட்சியம் செய்யாதவனைப் போல, தன் காலடியில் தானே பூப் போட்டுக் கொண்டுதான் நடப்பான் ராஜேஷ்; மற்றவர்களுடைய கவனமும் அன்பும் அவனுக்கென்று கொடுத்து வைத்திருந்த சொத்தென்று நினைப்பதைப் போல. கீதாவின் தந்தைதான் அந்தச் சம்பந்தத்தில் அவ்வளவு கருத்தாக இருந்தார். ஜப்பானுக்குப் போவதற்கு முன்பாகக் கூட அவள் திருமணம் நடந்திருக்கும்; ராஜேஷ் சற்று அலட்சியத்துடன் தள்ளிப் போட்டுவிட்டுப் போயிராவிட்டால்.

ஆறு மாதங்களுக்குமுன் ஒரு கடிதம் எழுதி இருந்தான். ஒரு சாதாரணமான மரியாதைக் கடிதம் அது. ஜப்பானைப் பற்றிய சுவாரசியமான குறிப்புக்கள். அவனுடைய வேலையைப் பற்றிய விவரங்கள். அவளைப் பற்றி அதில் ஒன்றும் இல்லை.

## திருத்தம்

3-12-1972 கல்கியில் 47-வது பக்கத்தில் பிரசுரமான செயின்ட் ஜோஸப்ஃப்ஸ் பப்ளிக் ஸ்கூல் விளம்பரத்தின் முதல் பாரா, 5வது வரியில் ''மாணவர்கள்'' என்று தவறுதலாகப் பிரசுரமாகியுள்ளது. அது ''சிறுமிகள்'' 5ம் படிவம் வரையில் மட்டுமே சேர்த்துக் கொள்ளப்படுவார்கள் என இருக்க வேண்டும். தவறுதலுக்கு வருந்துகிறோம்.

ஆறு மாதங்களுக்குப் பிறகு இரண்டாவது கடிதம் வந்திருக்கிறது. இதிலும் தனி மணம் ஏதும் இல்லை. உதிர்ந்த இரண்டு காகிதப் பூக்கள்தாம். அதில் அவன் காட்டுவதைப் போலத் தெரிந்த செயற்கை அழகுதான்.

நிலைக் கண்ணாடியின் முன்னால் அமர்ந்து கூந்தலை வாரிக் கொண்டிருந்தாள். சீப்புடன் மீண்டும் மீண்டும் ஒரே இடத்துக்கு உயரும் கை விரல்கள். அதைப்போல் ஒரே வரியில் மீண்டும் மீண்டும் ஓடிய நினைவு.

''நாளைக்கு என்னைப் பாலம் விமான நிலையத்தில் சந்திக்க வா, கீதா! உனக்கு ஓர் ஆச்சரியம் காத்துக் கொண்டிருக்கிறது!''

அவளுக்காக என்ன காத்திருந்தது? எதையுமே அலட்சியமாக ஏற்கும் ராஜேஷ், அவளுக்கென்று எதை அப்படி இரகசியமாகக் கொண்டு வருகிறான்?

அவளுக்காகக் காத்திருக்கும் ரகு எதையும் அவள் காலடியில் வைக்க நிற்பதைப் போல, அவனுக்கென்று கொடுக்க அவளிடம் என்ன இருந்தது? நெஞ்சு விழைந்தாலும், அவளுக்கு இப்போது ஏது அந்தச் சுதந்திரம்?

மறு நாள்.

விமானம் வருவதற்கு அரை மணி முன்னதாகவே வந்துவிட்டாள் கீதா. எக்ஸ்பிரஸோ பார், புத்தகக் கடை, ஒவ்வொன்றிலும் கொஞ்ச நேரம் கழித்தாயிற்று. கடைசியாகத் தகவல் தரும் 'கௌண்டர்' அருகே வந்து நின்று கொண்டாள்.

ரகுவைக் காணோம். அவன் எப்படி வருவான்? ஆனாலும் மனத்தில் ஓர் ஏக்கம். நேரே அவன் கண்களையே துருவும் பார்வையுடன் தான் நிற்க வேணும் போல் ஓர் ஆசை.

அறிவிப்புக் கேட்டது. விமானம் இறங்கி விட்டது. கண்ணாடி வழியே விமானத்திலிருந்து இறங்கி நடந்து வரும் பிரயாணிகளைப் பார்த்தபடி நின்றாள். நீல ஸூட் அணிந்து வரும் அவ்வாலிபன்தான் ராஜேஷ். அருகே கூடவே நடந்து வருவது — அது யார்?

அருகே வந்ததும் கையை உயரத் தூக்கி அடையாளமாக ஆட்டினான் ராஜேஷ். முகத்தில் களிப்பின் நிழலாய் ஒரு பொற்கதிர் வெளிச்சம். வெளிநாட்டு வாழ்க்கையும் சுகமும் சௌக்கியமாகச் சேர்த்த செழுமை.

பக்கத்தில் திரும்பி அறிமுகப்படுத்தினான். ''இவள்தான் மிஸ். கீதா.'' அவள்புறம் முகம் திரும்பிற்று. ''இவள்தான் மிச்சிகோ. இப்போது ஸ்வர்ண ராஜேஷ். போன மாதம் தான் எங்கள் திருமணம் நடந்தது.''

அவன் முகம் அவளையே கவனித்துக்கொண்டிருந்தது; கீதாவின் முக மாறுதல் ஏதேனும் இருக்குமானால் கண்டுபிடிக்க விரும்புவதைப் போல. ஆனால் அவளிடம் சிறிதேனும் அசைவில்லை. உள்ளூற ஓர் இன்ப ஊற்றுக் குமிழ் விடத் தொடங்கியிருந்தது அவளுக்கு. அவளுடைய மனப் பார்வையில் அங்கே தெரிந்தது ரகுவின் உருவம்தான்.

ஒரு நிமிஷம் மிச்சிகோ 'டாய்லெட்' அறைக்குப் போனாள். அவர்கள் இருவரும் தனியே இருந்தார்கள்.

''உன்னை ஏமாற்றிவிட்டேனா கீதா? அவள் என்னுடன் கூடவே பயிற்சி பெற்றவள். அழகு மட்டும் இல்லை; குணமும் 'ஸ்பெஷல்'தான். அவள் இல்லாமல் என்னால் வாழ முடியாது போலத் தோன்றியது. சொல்லப் போனால் திருமணம் என்பது இப்படி மனம் ஒன்றும் அநுபவம் ஒன்றுக்கு முடிவான முத்திரைதானே? உனக்குத்தான் ஏமாற்றமாக இருக்கலாம்'' என்றான் ராஜேஷ்.

கீதா வாசற்புறம் திரும்பினாள். அங்கே ரகுநாத் அவளை நோக்கி அவசரமாக வந்து கொண்டிருந்தான். அவள் நெஞ்சில் ஒரு கிளுகிளுப்பு எழுந்து அடங்கிற்று.

''அப்படி ஒன்றும் இல்லை ராஜேஷ்'' என்று சொன்னவள் அவனுக்கு ரகுநாத்தை அறிமுகம் செய்து வைக்கத் தயாரானாள்.

## டில்லி வாழ்க்கை!

● டிசம்பர் ஜனவரி மாதங்களில் தேங்கா வெண்ணெயைக் காகிதத்தில் பொட்டலம் கட்டிக் கொடுப்பார் மளிகைக் கடையில்.




● தினம் தினம் மீந்துபோகிற ரொட்டி, சப்பாத்திகளைத் தூர எறியாமல் சேர்த்து வைத்து நாம் பழைய பேப்பர்களை பேப்பர்க்காரனிடம் போட்டுக் காசாக்குவதுபோல், பேரம் பேசி, கிலோ இவ்வளவு என்று நிறுத்துக் கொடுத்து விற்பார்கள். சப்பாத்திதான் ஊசிப்போகாத பண்டமாயிற்றே! எத்தனை நாட்கள் ஆனாலும் கெடாமல் வறட்டிபோல் இருக்கும். வாங்குபவர்கள் அவைகளை ஆடு மாடுகளுக்குத் தீவனமாக உபயோகப்படுத்துவார்களாம்!

● 'உல்லே' வாங்கி ஓர் அவுன்சுக்கு எட்டணா முக்கால் ரூபாய் என்று பின்னும் கூலியைக் கொடுத்துவிட்டால் நீங்கள் விரும்பும் லேட்டஸ்ட் ராஜேஷ் கன்னா டிசைனில் ஸ்வெட்டர் பின்னித் தருவார்கள், கறுகறுப்புள்ள பஞ்சாபி - சிந்தி பெண்கள்.

● சைக்கிளில் 'டபிள்ஸ்', 'டிரிபிள்ஸ்' என்று எத்தனை பேர்கள் வேண்டுமானாலும் ஓட்டும் சக்திகேற்பச் சவாரி செய்யலாம். போலீஸ்காரரைக் கண்டால் மட்டும் மரியாதைக்குக் கொஞ்சம் இறங்கி, பிறகு ஏறிக் கொள்ளலாம்.

● மலிவான வெள்ளைத் துணிகளை நிறுத்து வாங்கி உங்களுக்குப் பிடித்தமான டிசைனில், கலரில் பிரிண்ட் போட்டுக் கொள்ளலாம். அதற்காகத் தனிக் கடைகள் மூலைக்கு மூலை இருக்கின்றன. கூலி குறைவுதான். சில சமயங்களில் சாயம் போட்டுக் கொடுக்க உங்கள் வீட்டு வாசலுக்கே வந்துவிடுவார்கள். நடை மிச்சம்.

● இரண்டொரு மாத லீவில் குடும்பத்தோடு வெளியூர் போகவேண்டியிருக்கிறதா? பெரிய வீட்டையோ, பங்களாவையோ பூட்டி விட்டுப் போக உங்களுக்குப் பயம். வாடகைக்கு விட்டுப் போனால் திரும்பி வரும் சமயத்தில் காலி செய்யச் சொல்ல முடியாது. அருமையான உபாயம் இந்த ஊரில்தான் நடைமுறையில் இருக்கிறது. உங்களுக்குத் தெரிந்த உறவினர் அல்லது நண்பரைக் 'கார்டேக்கர்' ஆக இருக்கச் சொல்ல முடியும். ஒன்றேகால் ரூமில் ஒண்டுக் குடித்தனம் இருக்கும் அவருக்கு வாடகை கிடையாது. தண்ணீர், லைட் சார்ஜ் மட்டும் அவர் கட்ட வேண்டும்.

—தொகுப்பு: லக்ஷ்மிராமன்

# சுவாமி ருத்ரானந்தர்

## ஏ. கே. செட்டியார்

பிஜித் தீவில் ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தின் தலைவரான சுவாமி ருத்ராநந்தருக்கு இப்பொழுது வயது 72.

முப்பத்து நான்கு ஆண்டுகளுக்கு மேலாக அங்குள்ள இந்தியர்களுக்குத் தொண்டு செய்து வருகிறார். 1949ம் ஆண்டில் லண்டனில் நடைபெற்ற ஒரு மகாநாட்டுக்குப் பிரதிநிதியாகச் சென்ற சுவாமிஜி இந்தியாவுக்கு வந்து சில வாரங்கள் தங்கினார்.

இருபத்திரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு சுவாமிஜி இப்பொழுது இரண்டாம் முறையாக இந்தியாவுக்கு வந்திருக்கிறார். சென்ற மூன்று மாதங்களாகத் தமிழ் நாட்டில் ஸ்தல யாத்திரை செய்து கொண்டிருக்கிறார். இன்னும் இரண்டு மாதங்கள் தங்கிய பின்னர், ஐரோப்பா, அமெரிக்கா முதலிய நாடுகளில் சுற்றுப் பிரயாணம் செய்து, பிஜித் தீவுக்குப் போய்ச் சேருவார்.

சுவாமிஜி, மாயவரத்தை அடுத்த மணல்மேட்டில் ஒரு பிரபலமான மிராசுதார் குடும்பத்தில் பிறந்தார். பெற்றோர் இட்ட பெயர் முத்துக்கிருஷ்ணன். சுவாமிஜி 'கல்கி'யின் பள்ளித் தோழர். மாயவரத்திலும் பின்னர் திருச்சியில் ஸெயிண்ட் ஜோசப் கல்லூரியிலும் கல்வி பயின்றார்.

இளமைப் பிராயத்தில் தேசிய இயக்கத்தில் பெரும் பங்கெடுத்துக் கொண்டார். காந்தியடிகளின் நிர்மாணப் பணிக்குத் தம்மை அர்ப்பணித்தார். சேரியில் ஹரிஜனங்களிடையே ஆக்க வேலை செய்தார். டாக்டர் வரதராஜுலு நாயுடு தலைமையில் நடைபெற்ற அரசியல் மகாநாட்டில் கலந்துகொண்டார். 1921ஆம் ஆண்டு அகமதாபாத்தில் நடைபெற்ற இந்திய தேசிய காங்கிரஸுக்குத் தமிழ் நாட்டிலிருந்து சென்ற பத்துப் பிரதிநிதிகளில் இவரும் ஒருவர்.

சுவாமிஜி, மணல்மேடு கிராமத்தில் பஜனை மடத்திலேயே தங்குவது வழக்கம். ரகசியப் போலீஸார் இவரைக் கண்காணித்துக்கொண்டிருப்பார்கள். இது பற்றி ஒரு ருசிகரமான சம்பவத்தை சுவாமிஜி பின்வருமாறு கூறினார்:

''அகமதாபாத் காங்கிரஸுக்குச் செல்வதற்காக மாயவரத்திலிருந்து சென்னைக்கு ரயிலில் பிரயாணமானேன். என்னுடன் சி. ஐ. டி. இன்ஸ்பெக்டர் ஒருவர் வந்தார். வழியில் விழுப்புரத்தில் இறங்கி ஒரு நண்பரைப் பார்க்கச் சென்றேன். பின்னர் இரவில் சென்னைக்குப் புறப்படும் ரயிலுக்கு வந்தேன். அந்நாளில் விழுப்புரத்திலிருந்து சென்னைக்கு இரவில் ஒரு ரயில் வண்டிதான்.

''விழுப்புரத்தில் நான் நண்பரைப் பார்க்கச் சென்றபொழுது, சி.ஐ.டி. இன்ஸ்பெக்டர் ரயில்வே ஸ்டேஷன் மாஸ்டரிடம் முன்கூட்டியே பேசி, என்னைச் சென்னைக்குச் செல்லாமல் தடுக்க ஏற்பாடு செய்திருந்தார். விழுப்புரம் ஸ்டேஷனுக்கு நான் திரும்பி வந்தபொழுது, ஸ்டேஷன் மாஸ்டரும் சி. ஐ. டி. இன்ஸ்பெக்டரும் எனக்காக வழியில் காத்திருந்தனர். ஸ்டேஷன் மாஸ்டர் எனது டிக்கட்டைக் காட்டும்படி கூறினார். காட்டினேன். டிக்கட்டில் இது தவறு, அது தவறு என்று சாக்குகள் சொல்லிக் கால் மணி நேரம் என்னைத் தாமதப்படுத்தினர். அதற்குள் ரயில் சென்னைக்குப் புறப்பட்டு விட்டது. அந்த ரயில் தவறினால், அகமதாபாத்துக்குக் காங்கிரஸ் தொடங்கும் தினத்தன்று போய்ச் சேர முடியாது.

''சி.ஐ.டி. இன்ஸ்பெக்டர் செய்த சூழ்ச்சி அப்பொழுதுதான் எனக்குப் புரிந்தது. உடனே ஊருக்குள் சென்று, ஒரு வாடகை மோட்டாரை ஏற்பாடு செய்து, ரயில் வருவதற்குமுன் திண்டிவனம் போய்ச் சேர்ந்து ரயிலைப் பிடித்துவிட்டேன். பிறகு சென்னை சென்று அகமதாபாத்துக்குச் சென்றேன்.

''என்னைக் காணாததால் தந்திகள் பறந்தன. பின் அந்த சி.ஐ.டி. இன்ஸ்பெக்டர் ஸஸ்பெண்டு செய்யப்பட்டார் என்றறிந்தேன்.''

சுவாமிஜி தம் வாலிப வயதில் சுவாமி விவேகாநந்தர் எழுதிய, ''கொழும்பிலிருந்து அல்மோரா வரை'' என்ற நூலைப் படித்தாராம். ''அதுதான் என் வாழ்க்கையைத் திருத்தி அமைத்தது'' என்றார் சுவாமிஜி.

1923ஆம் ஆண்டில் தமிழ்நாட்டில் பெரும் வெள்ளம் ஏற்பட்டது. வெள்ள நிவாரண வேலைகளில் பேராற்றல் படைத்த சுவாமிஜி பதினெட்டு மணி நேரம் தண்ணீரில் நின்று வேலை செய்துவிட்டு, பஜனை மடத்தில் களைப்பாக வந்து படுத்தார். பதினெட்டு நாள் வெள்ளம் பல ஊர்களைப் பாழ்படுத்திப் போயிற்று.

வெள்ளம் வடிந்த ஒரு நாள் காலையில் ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்துத் துறவிகளாக சுவாமி அகிலாநந்தரும், சுவாமி கேதாரேசுவராநந்தரும் நிவாரண வேலைக்காக மணல்மேடு சென்றனர். அவர்களுக்குத் தமிழ் தெரியாததாலும், ஊர்கள் வழி தெரியாததாலும், ஆங்கிலம் தெரிந்த வாலிபர் யாராவது தங்களுக்கு உதவி செய்யக் கிடைப்பாரா என்று ஊரில் உள்ளவர்களை விசாரித்தனர். அனைவரும் ஒருமுகமாக இளைஞர் முத்துக் கிருஷ்ணன் பெயரையே கூறினர். அன்று முதல் எட்டு மாதங்கள் வரையில் இளைஞர் முத்துக் கிருஷ்ணன் துறவிகளுடன் சேர்ந்து நிவாரண வேலையில் ஈடுபட்டார். ''வெள்ளத்தில் கண்டெடுத்த முத்து'' என்று சுவாமி கேதாரேசுவராநந்தா இவரைப் பாராட்டுவதுண்டு.

துறவிகளின் கூட்டுறவினால், இளைஞர் முத்துக்கிருஷ்ணன் வெள்ளக் கஷ்ட நிவாரண வேலை முடிந்ததும் ராமகிருஷ்ண மடத்தில்

சேருவதற்காகச் சென்னைக்கு வந்தார். ஆனால் சென்னை மடத்திலிருந்த தலைவர் சுவாமி சர்வானந்தர், இளைஞர் முத்துக்கிருஷ்ணனை மடத்தில் சேர்த்துக் கொள்ள இணங்கவில்லை. ''பெற்றோர்களின் சம்மதம் இருந்தால்தான் மடத்தில் சேரலாம்'' என்று கண்டிப்பாகக் கூறிவிட்டார்.

உடனே இளைஞர் முத்துக்கிருஷ்ணன் ஊருக்குச் சென்று, பெற்றோர் சம்மதம் பெற்று, சேரியில் உள்ளோர்க்கு அன்னதானம் அளித்து எல்லோருடைய ஆசியுடனும் பொதுத் தொண்டு செய்யப் புறப்பட்டார்.

ஆரம்ப காலத்தில், ''ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்'' என்னும் தமிழ் மாதப் பத்திரிகையின் ஆசிரியராகப் பணியாற்றினார். ''தொண்டர் சங்கம்'' தோற்றுவித்தார். மயிலாப்பூரில் ''இராமகிருஷ்ணபுரம்'' உண்டாக்கினார். சுவாமி விபுலாநந்தா, சுவாமி கேதாரேசுவரானந்தா, சுவாமி சித்பவாநந்தா முதலியோருடன் கைலாய யாத்திரை செய்தார். பின் கேதாரம்–பத்திரிகாசிரமம் சென்று வந்தார்.

1937ஆம் ஆண்டில் தீனபந்து சி.எப். ஆண்ட்ரூஸ் பெருமகனார் தூண்டுதலின் பேரில் ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தார் பிஜித் தீவுக்கு சுவாமி அவிநாசாநந்தரை அனுப்பினர். பத்து மாத காலம் தொண்டு செய்த பின்னர், வயது முதிர்ந்த சுவாமி அவிநாசாநந்தர் தாய்நாடு திரும்பினார். பின்னர் இளைஞ



ரான சுவாமி ருத்ராநந்தரைப் பிஜித் தீவுக்கு மடத்திலிருந்து அனுப்பினர்.

பிஜித் தீவுகள், பசிபிக் மகாசமுத்திரத்தில் ஆஸ்திரேலியாவுக்கும் ஹாவாய்த் தீவுகளுக்கும் இடையில் 250 தீவுகள் கொண்டவை. அவற்றில் முக்கியமானது ''வித்திலேவு''. அடுத்தது ''வனுவாலேவு.'' பதினைந்து தீவுகளில்தான் மக்கள் வசிக்கின்றனர்.

பிஜித் தீவுகளின் பரப்பு எண்பதாயிரம் சதுர மைல். மக்கள் தொகை இன்று ஐந்தரை லட்சம். அவர்களில் இந்தியர் தொகை மூன்று லட்சம். பூர்வகுடிகளான கைவித்தியர் இரண்டேகால் லட்சம். ஐரோப்பியர், சீனர் முதலியோர் சுமார் ஐயாயிரம் விதம்.

பிரிட்டிஷ் காலனியாக இருந்த பிஜித் தீவு 1970-ல் பூரண சுதந்திர நாடாயிற்று. அங்குள்ள எல்லோரும் அந்நாட்டுப் பிரஜைகள். அனைவருக்கும் சம உரிமை உண்டு.

பிஜித் தீவில் இப்போது பேசும் பொதுப் பாஷையாக ஹிந்தி பாஷை அமைந்து வந்து கொண்டிருக்கிறது. ஹிந்தியிலே சுவாமிஜி மிகச் சரளமாகப் பேசுவார்.

மூன்று லட்சம் இந்தியரில், சுமார் அறுபதாயிரம் பேர் தென்னிந்தியர். நாற்பத்தைந்து ஆண்டுகளுக்குமுன் அவர்கள், ''தென்னிந்திய சன்மார்க்க ஐக்கிய சங்கம்'' ஆரம்பித்தனர். இதனைத் தொடங்கியவர் சாது குப்புசாமி. சுவாமி அவிநாசாநந்தா இதனை ரிஜிஸ்தர் செய்வித்தார். இதன் பொறுப்பை ஏற்று நிர்வகித்தவர் சுவாமி ருத்ராநந்தா.

'' கரும்புத் தோட்டத்திலே'' என்று பாரதியார் பிஜித் தீவைப் பற்றிப் பாடினர் அல்லவா? அந்தக் கரும்புத் தோட்டங்கள் முழுவதும் சி. எஸ். ஆர். என்ற ஆஸ்திரேலியக் கம்பெனிக்குச் சொந்தம். ஒவ்வோர் இந்திய விவசாயிக்கும் பத்து ஏக்கர் நிலம் பத்து வருஷங்களுக்குக் குத்தகை. அதில் ஒரு வீடு கட்டிக் கொள்ளலாம். ஒன்பது ஏக்கர் கரும்பு சாகுபடி செய்ய வேண்டும். ஓர் ஏக்கரில் சொந்தமாகப் பயிரிடலாம். கரும்பு அனைத்தையும் வெட்டி வண்டி நிறைத்துக் கொடுக்க வேண்டும். அதனைக் கம்பெனியார் சர்க்கரை ஆலைக்குக் கொண்டு செல்வார்கள். அவர்கள் நிர்ணயிக்கும் குறைவான விலையைத்தான் விவசாயி பெற வேண்டும். சர்க்கரையை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்வார்கள். ஒரு டன் சர்க்கரையின் விலையில் முப்பது சதவிகிதம் விவசாயிக்கு; எழுபது சதவிகிதம் அரைத்துச் சர்க்கரை செய்த கம்பெனிக்கு.

''சி.எஸ்.ஆர். கம்பெனியார் ஆறு மாத காலம் கரும்பை அரைத்துப் பிழிகிறார்கள். ஆண்டு முழுதும் இந்தியர்களை அரைத்துப் பிழிகிறார்கள்'' என்று சுவாமி அவிநாசாநந்தா ஒரு முறை கூறினர்.

யுத்த காலத்தில் கரும்பின் விலை, அடுப்பெரிக்கும் விறகின் விலையில் பாதியாகக்

## பிஜித் தீவில் இந்துமதத் திருப்பணி

கடவுள் நெறியில், வழிபாட்டில் பிஜி மக்களுக்கு மிக்க ஈடுபாடு உண்டு.

குறிப்பாகத் தென்னிந்தியர்கள் திருப்பதி ஸ்ரீ வேங்கடேசப் பெருமானைத் திக்கு நோக்கித் தண்டம் செய்கிறார்கள். முருகப் பெருமானை அனுதினமும் போற்றி வணங்குகிறார்கள்.

முருகனுக்கும், சிவபெருமானுக்கும், விநாயகருக்கும், வேங்கடேசப் பெருமானுக்கும், தேவி மாரியம்மனுக்கும் இன்னும் பல தெய்வங்களுக்கும் சிறிது சிறிதான ஆலயங்கள் ஆங்காங்கே கட்டுவித்து வழிபட்டு வருகிறார்கள்.

இந்த ஆலயங்களுக்காகக் கூடியமட்டிலும் பாரத நாட்டிலிருந்து சில விக்கிரகங்கள் வரவழைத்து பிரதிஷ்டை செய்துள்ளார்கள்.

ஆனால் பிஜியில் நம் நாட்டு மக்களுக்கு ஆழ்ந்த கடவுள் பக்தியும், தீவிர வழிபாட்டுக்கான ஊக்கமும், உண்டாக்கும் வகையிலும், அவர்களுடைய சந்ததியாரை ஈர்த்துப் பக்தி உண்டாக்கக்கூடிய வகையிலும் அமையும் விக்கிரகங்கள் தேவையாய் இருக்கின்றன.

வாழையடி வாழையாய் வரும் தோன்றல்களுக்காக இத்தெய்வத் திருப்பணியை நம்மவர் தாய்நாட்டிலிருந்து உதவியளித்து நிறைவேற்றி வைத்தல் மிகவும் அவசியமானதாகும்; நம் கடமையுங்கூட.

வகை வகையான கற்சிலைகளும், கலைத் திறனுள்ள ஆகம விதிப்படி அமைந்த உலோகத்திலான உத்ஸவ மூர்த்திகளும் அநேகம் தேவை. திருவாட்சி, குத்து விளக்குகள், கோயில் பெரிய மணிகள், பட்டுப் பீதாம்பரங்கள், அலங்காரத் தீபங்கள் ஆகியவையும் தேவை.

தற்பொழுது சுமார் 15,000 ரூபாய் செலவில் கற்சிலைகள், மெய்யன்பர் ஒருவர் மேற்பார்வையில், இத் துறையில் தேர்ச்சிபெற்ற ஸ்தபதியைக் கொண்டு தயாரிக்கப் பெற்று வருகின்றன.

ரூபாயாகவும், மேற்கண்ட இனங்களில் சாமான்களாகவும் அவரவர்களுக்குத் தோன்றிய வகையில் உதவி செய்யலாம்.

சுவாமி ருத்ரானந்தா, ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், மயிலாப்பூர், சென்னை—600004 என்ற விலாசத்துக்குத் தொடர்பு கொள்ளலாம்.

குறைந்துவிட்டது. விவசாயிகள் எவ்வளவோ முறையிட்டும் கம்பெனியார் ஒன்றும் செய்ய வில்லே. அரசாங்கமும் தலையிட மறுத்துவிட்டது.

விவசாயிகள் சுவாமிஜியிடம் முறையிட்டனர். சுவாமிஜி யும், சங்கத்தின் சட்ட ஆலோசகரான பாரிஸ்டர் அம்பாலால் படேலும் துணை நின்று ஒத்துழையாமைப் போர் நடத்தினர். கரும்பு விவசாயிகளுக்கு உதவி செய்தனர்.

சுவாமிஜியும், படேலும் அவர்கள் வசித்த நந்தி என்ற ஊரிலிருந்து ஐந்து மைல் வட்டத்துக்கு மேல் செல்லக்கூடா தென்று அரசாங்கம் தடை விதித்தது.

விவசாயிகள் கட்டுப்பாடாக இருந்தனர். அரசாங்கத்தின் உதவி கொண்டு கம்பெனியார் பலவந்தமாகக் கரும்பு வெட்ட முயன்றனர். இதனைக் கண்ட விவசாயிகள், தங்கள் பயிர் களுக்குத் தங்கள் கையாலேயே தீயிட்டனர். தீவு முழுதும் நெருப்பு. இதனை ''லங்கா தகனம்'' என்றனர்.

விவசாயிகள் கட்டுப்பாட்டையும், தியாகத்தையும் கண்ட அரசாங்கம் பணிந்தது; விவசாயிகள் வெற்றி பெற்றனர்.

பிஜி சுதந்திரமடைந்த பின்னர், லார்டு டென்னிங் கரும்பு சம்பந்தமாக ஒரு தீர்ப்பு செய்தார். அந்தத் தீர்ப்பின் படி சர்க்கரை விலையில் விவசாயிக்கு 65 சதவிகிதமும், ஆலை முதலாளிக்கு 35 சதவிகிதமும் என்று ஏற்பட்டது. அது கம் பெனியாருக்குச் சாதகமாக இல்லை. எனவே தங்கள் நிலங் களையும், கரும்பு ஆலைகளையும் விற்க முடிவு செய்தனர்.

கரும்பு விவசாயத்தோடு, சர்க்கரை உற்பத்தி விற்பனை ஆகிய எல்லாவற்றிலும் குறைந்தது நாற்பத்தைந்து சத விகிதம் — குத்தகைக்காரர்களான இந்திய விவசாயிகளுக்கே வேண்டும் என்று கிளர்ச்சி செய்து வெற்றியும் பெற்றனர்.

ஆரம்பத்தில் அடிமைகளைப் போன்று ஒப்பந்தக் கூலி களாகச் சென்ற இந்தியர்கள், இப்பொழுது ஆலை, நிலச் சொந்தக்காரர்களாகவும் இருக்கின்றனர்.

பிஜித் தீவில் இந்தியர்கள் சம உரிமை பெற்றுக் கண்ணிய மாகவும் சந்தோஷமாகவும் வாழ்கின்றனர். இதற்கு முக்கிய காரணம் சுவாமி ருத்ராநந்தரும் அம்பாலால் படேலுமே.

சுவாமிஜிக்கு வலது கை போலிருந்த பாரிஸ்டர் அம்பா லால் படேல் இரண்டு ஆண்டுகளுக்குமுன் காலமானார். ''இல்லறத்தில் இருந்து கொண்டே பொதுநல வாழ்வுக்குத் தம்மை அர்ப்பணித்த மகான்'' என்று சுவாமிஜி படேலைப் பற்றிக் கூறியபொழுது, சுவாமிஜியின் கண்கள் கலங்கின.

தெய்வ வழிபாடு விஷயங்களிலும் சுவாமிஜியின் தொண்டு சிறந்து விளங்குகிறது. நந்தி சிவசுப்பிரமணிய சுவாமி கோயில், லம்பாஸா வேங்கடேசப் பெருமாள் கோயில் முதலிய பத்துக் கோயில்களைச் சுவாமிகள் நிர்வகிக்கின்றார். வாரந்தோறும் பட்டிதொட்டிகளி லெல்லாம் பஜனைகள் நடைபெறுகின்றன.

கல்வித் துறையில் முப்பது பள்ளிகளை நிர்வகிக்கிறார் சுவாமிஜி. பதினையாயிரம் மாணவர்களுக்கு மேல் கல்வி பயிலு கின்றனர். பிஜியில் உயர்தரப் படிப்பு உண்டாவதற்கு சுவாமிஜி ஆரம்பித்த ஸ்ரீ விவேகாநந்த ஹைஸ்கூலே காரண மாயிற்று. பிஜியில் பல்கலைக் கழகம் ஏற்படுவதற்கு சுவாமிஜியே காரணம் என்பது மிகையாகாது.

சுவாமிஜியின் ஆதரவில் நடைபெறும் பத்திரிகைகள் மூன்று. ஆங்கிலத்தில் ''Pacific Review'' என்ற வாரப் பத்தி ரிகை. இதில் இரண்டு பக்கங்கள் கைவித்தி மொழியில் கைவித் தியர்களுக்காக வெளிவருகிறது. இரண்டாவது ''ஜாகர்தி''. இது இந்தி மொழியில் வெளிவரும் வாரப் பத்திரிகை. மூன்று வது ''சங்கம்''. இது தமிழில் வெளிவரும் மாதப் பத்திரிகை.

கைவித்தி பாஷையில், திருக்குறள், ராமாயணம் ஆகிய வற்றை மொழிபெயர்க்கச் செய்து அச்சிட்டு வழங்கியிருக்கிறார்.

ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்துக்குச் சொந்தமான ஆயிரம் ஏக்கர் எஸ்டேட்டும் சுவாமிஜியின் நிர்வாகத்தின் கீழ் இருக் கிறது. நல்ல நூல் நிலையம் ஒன்றும் நிறுவியிருக்கிறார்.

கண்ணுக்கு எட்டாத தூரத்திலே உள்ள மக்களின் வாழ் வுக்காகத் 'தம்மையே அர்ப்பணித்துக் கொண்டுள்ள தமிழ் மகனை சுவாமி ருத்ராநந்தரைக் கண்டு, தமிழ்த்தாய் மகிழ்ச்சி யும் பெருமையும் அடைவாள்.



" ராகுகாலம், எமகண்டம், மரணயோகம் என்று இப்ப எதுவும் இல்லேயே சாமி?"

"ஏன், என்ன சமாசாரம்?"

"உங்களிடம் இப்ப சோஸ்யம் கேட்க வேண்டியிருக்கு!"




"கண்ணன் என் காதலன் இருக்கா?"

"அது 'ஸ்டாக்' இல்லே! ஆனால் என் பேர் நம் கண்ணன்தான்!"



"கச்சேரியில் என்னுடன் பாடி றவருடன் உடன்பாடு செய்து கொண்டு விட்டேன்."

"உடன்பாடுறவருடன் உடன் பாடா? என்ன உடன்பாடு?"

"நான் பாடுறபோது உடன் பாடணுமே தவிர, நான் சோடா குடிக்கிறபோது உடன் குடிக்கு, நான் பொடி போடுறபோது உடன் பொடி போடக் கூடாது என்று...!"

இடைவேளை.

நாடகத்துக்குத் தலைமை தாங்க வந்திருந்த பழம்பெரும் நடிகர் உளமாற நாடகத்தைப் பாராட்டினார். சம்பிரதாயத்துக்காகப் பேசப் படும் புகழ்ச்சி வார்த்தைகள் அல்ல அவை. நூற்றுக்கு நூறு அவர் எண்ணத்தைப் பிரதி பலித்தன அவர் சொற்கள்.

''இந்த நாடகத்தை எழுதி டைரக்ட் செய்து கதாநாயகனாக நடித்த திரு ராஜனுக்கு என் பாராட்டுக்கள். ஒவ்வோர் அமெச்சூர் நடிகரும் — ஏன், தொழில் நடிகர்கள்கூட — கற்றுக் கொள்ளக்கூடிய உத்திகள் இவரிடம் தெரிகின்றன. நான் எத்தனையோ நாடகங்கள் நடித்திருக்கிறேன். பல நாடகங்களைப் படித்திருக்கிறேன். நாடகத்தின் ஆரம்பம் முதல் என்னையறியாமல் காட்சிகளில் இலயித்தது இதுவரை கிடையாது. இந்த இளைஞருக்கு என் வாழ்த்துக்கள். இவர் கைவண்ணத்தில் கலைத் தாய் நிச்சயம் பெருமையடைவாள்.....''

சபையில் கூடியிருந்தோர் ஏகோபித்துக் கை ஒலி எழுப்பி அவைத் தலைவரின் கூற்றை அப்படியே ஆமோதித்தனர். ராஜன் தான் எடுத்த பணி வெற்றி பெற்றது குறித்துப் பெருமகிழ்ச்சியுற்றான்.

நாடகம் முடிந்தது. ஒப்பனை அறையில் பிரத்தியேகமான நண்பர்களின் தனிப்பட்ட

# நீறு பூத்த நெருப்பு

அன்னம்

பாராட்டுகளுக்குத் தன் நன்றியைத் தெரிவித்துக் கொண்ட ராஜன் உடனடியாகக் கவனிக்கப்பட வேண்டிய சில அலுவல்களை முடித்துக் கொண்டான். உடன் நடித்த நடிகையர்களுக்குப் பணம் கொடுத்து வாகனம் அமர்த்தி அவரவர்கள் இருக்கைக்கு அனுப்பிய பிறகு தான் தன் வீட்டைப் பற்றி அவனால் நினைக்க முடிந்தது.

தியேட்டர் வாசலுக்கு வந்தவன் தன் காரின் முன் கதவைத் திறந்து அமர்ந்தான். அதுவரையில் பின் சீட்டில் ஒரு மூலையில் அமைதியாக உட்கார்ந்திருந்த வசந்தி உரிமையுடன் அவன் பக்கத்தில் வந்து அமர்ந்து கொண்டாள்.

கார் புறப்பட்டது. இரண்டு நிமிஷ நேரம் மௌனம் நிலவியது.

'' என்ன வசந்தி ! தூங்கிப் போய்விட்டாயா ?'' என்று விசாரித்தான் ராஜன்.

'' இல்லையே !'' என்றாள் அவள் சுருக்கமாக.

''நாடகம் எப்படி?'' என்று ஆவலுடன் கேட்டான் ராஜன் மறுபடியும்.

''நன்றாக இருந்தது!'' என்று பதில் வந்தது அமைதியாக.

ராஜனுக்கு இந்தப் பதில் போதவில்லை. அவன் கேட்ட பிறகா அவள் பதில் சொல்வது? அவளாகத் தன் பாராட்டுக்களால் அவனைக் குளிர்வித்திருக்க வேண்டாமா ?

''அவ்வளவுதானா ? அதற்கு மேல் ஒன்றும் சொல்லத் தெரியவில்லையா?... இல்லை.... சொல்வதற்கு ஒன்றும் இல்லையா?'' என்று கேட்டான் ராஜன்.

''அதுதான் சொன்னேனே.....! நன்றாக இருந்தது என்று......''

'' உன் பக்கத்தில் உட்கார்ந்தவர்கள் எப்படிப் பேசிக்கொண்டார்கள்? ஏதாவது அபிப்பிராயம் சொன்னார்களா ?''

''நான் கவனிக்கவில்லை!'' என்றாள் வசந்தி.

''அவர்கள் உன் காதில் வந்து கத்தினால் கூட நீ கவனிக்கமாட்டாய்.... உம்... உன் சுபாவம் அது....'' என்று சலித்துக் கொண்டான் ராஜன்.

அவள் பதில் ஏதும் பேசவில்லை.

'' என்ன, கோபம் வந்துவிட்டதா ?'' என்று கேலியுடன் வினவினான் அவன்.

'' எனக்கென்ன கோபம்?''

''இல்லை, பேச்சையே காணுமே என்று பார்த்தேன்......''

'' நீங்கள் மட்டும் பேசிக் கொண்டு வந்தீர்களோ?'' என்றாள் வசந்தி சட்டென்று.

''இதில் ஒன்றும் குறைவு இல்லை....உம்... அந்த நாடக மேதை எப்படிப் பேசினார், கேட்டாயா ?''



'' கேட்டேனே..... நன்ருகப் பேசினர்.''
''அவர் சொன்னபடி அத்தனை அழகாகவா என் நடிப்பு இருந்தது?''
'' நன்ருகத்தான் இருந்தது.....''
''உனக்குப் பிடித்த கட்டம் எது?''
'' எல்லாமே எனக்குப் பிடித்திருந்தன !''
ராஜன் மீண்டும் மௌனத்தில் ஆழ்ந்தான். அவன் காரின் இன்ஜின் போட்ட ஒரே சீரான ஒலியைத் தவிர வேறு எதுவும் அங்கு எழ வில்லை.
''அந்தக் கதாநாயகியாக நடித்த சந்தியா—கொஞ்சம் 'ஓவர்'.... இல்லையா?'' — என்று மீண்டும் தொடங்கினன்.
''ஆமாம்.......''
''எதில் 'ஓவர்' என்கிருய்?''
'' உங்களுக்கேதான் தெரிந்திருக்கிறதே... நான் தனியாக என்ன சொல்லப் போகி றேன்?'' என்ருள் வசந்தி.
''ஒத்திகையின் போது அத்தனை நெருக்க மாக நடிக்க வேண்டும் என்று நான் சொல்லவேயில்லை..... வேண்டாத போது எல்லாம் தொட்டுத் தொட்டுப் பேசி, அநாவசியமாக நெஞ்சில் தலையைப் புதைத்துக்கொண்டு—எனக்குப் பிடிக்கவே யில்லை... அங்கே மேடையில் நான் என்ன செய்ய முடியும்? நானும் அதற்கு ஈடுகொடுத்து நடிக்க வேண்டி வந்து விட்டது!'' என்று சொன்ஞன் ராஜன்.
இதற்காக அவள் கோபித்துக் கொண்டு சிணுங்கி அவனுடன் ஊடி யிருந்தால்கூட அவனுக்குப் பெரிதும் திருப்தி ஏற்பட்டிருக்கும்.
'' அதனல் என்ன, நடிப்புத்தானே ?'' என்று சாதாரணமாக அதை எடுத்துக் கொண்டாள் வசந்தி.
'' நீ ஏதாவது தவருக நினைத்துவிடக் கூடாதே என்ற பயம் எனக்கு.... நாளைக்கு அவளைக் கண்டித்தே ஆக வேண்டும். அடுத்த முறை நாடகம் நடிக்கப்படும்போது கட்டாயம் ஒதுங்கி யிருக்கச் சொல்லப் போகி றேன்.... என்ன சரிதானே......?''
''உங்களுக்குத் தெரியாதா, எப்படி இருக்க வேண்டும் என்று...? நான் என்ன சொல்லப் போகிறேன்?'' என்ருள் வசந்தி.
ராஜனுக்கு எரிச்சலாக வந்தது. காரின் ஆக்ஸிலேடரை அழுத்தி மிதித்தான். அது சீறிக் கொண்டு பாய்ந்தது. அதற்குப் பிறகு அவன் எதுவும் பேசவில்லை.






ராஜன் வசந்தியைக் கையைப் பிடித்து வருஷம் ஐந்துக்கு மேல் ஓடிவிட்டன. குழந்தைகள் ஏதும் இதுவரை இல்லை.
ராஜன் நல்லதோர் உத்தியோகத்தில் இருந்தான். பெயருக்கேற்ருற்போல் அழகன்; நல்ல சிவப்பு. கன்னங்கள் இயற்கையாகவே சற்றுப் பூசினுற்போல் கவர்ச்சியாகக் காணப்படும். தலைமுடி சுருட்டையாகக் கொத்துப் போல் நெற்றியில் விழுந்து புரண்டு ஒரு தனி அழகைக் கொடுக்கும்.
எந்த விதத்திலும் வசந்தி அவனுக்குக் குறைந்தவள் இல்லை. நன்கு படித்தவள். ராஜனுக்குச் சரியான ஜோடி. வசதிமிக்கக்

## பல்லினால் கேட்கலாம் !

காது கொடுத்துக் கேள் என்கிறோம். காது கேளாதவர்கள் எதிர்காலத்தில் பல்லினால் கேட்பார்கள்!

கலிஃபோர்னியா பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த பல் விஞ்ஞானி டாக்டர் எர்ல் கோல்லார்ட் ஒரு நுண்ணிய ரேடியோவைக் கண்டுபிடித்திருக்கிறார். இதைப் பல்லில் பொருத்திவிட்டால் ரேடியோ சங்



கேதங்களை ஒலி அலைகளாக மாற்றிப் பல் நரம்புகள் வழியே மூளைக்கு அனுப்புகிறது. மூளையின் கேட்கும் பகுதி ஒலியாகவே அவற்றை நன்கு உணர்கிறது.

வெளியே தெரிகிற மாதிரி காது கேட்கும் கருவிகளை அணிய விரும்பாதவர்கள் இந்தப் பல்லால் கேட்கும் கருவியை வரவேற்பார்கள் என்கிறார் கோல்லார்ட்.

குடும்பத்தில் பிறந்தவள். ராஜன் அவள் மேல் தன் உயிரையே வைத்திருந்தான். அவள் மேல் அவன் எந்தக் குறையும் காணவில்லை — ஒன்றைத் தவிர.

கூட்டுக்குள் முடங்கிய நத்தையைப் போல், தொட்டாற்சுருங்கி இலையைப் போல் அவள் இருந்தாள். தானாகவே கலகலவென்று பேச மாட்டாள். யாராவது வேண்டுமென்று பேச்சுக் கொடுத்தாலும் உடனே முடங்கிக் கொள்வாள். ராஜனுக்கு ஆதங்கம் இதுதான்.

"சரியாக இருக்கிறதா?" என்ற கேள்விக்கு, 'உம்' என்று மட்டும் பதில் வரும். அவனுக்கு அலுத்துப் போகும்.

அன்று அவனுக்கு அலுவலகத்தில் பதவி உயர்வு கிடைத்திருந்தது. சம்பளத்தில் கிட்டத்தட்ட ஐந்நூறு ரூபாய்க்கு மேல் கூடுதல் கிடைத்தது. போனில் வசந்தியைக் கூப்பிட்டு விஷயத்தைச் சொன்னான்.

"அப்படியா ?" என்று கேட்டாள் அவள். மேலே ஏதும் பேசவில்லை.

'எனக்கு எத்தனை ஆனந்தமாக இருக்கிறது தெரியுமா?...நீங்கள் வீட்டுக்கு வாருங்களேன் ...இன்றைக்கு உங்களுக்கு நான் ஸ்பெஷலாக ஒன்று தருவேன்...நீங்கள் செய்யும் வேலைக்கு இது போதவே போதாது... இன்னும் அதிகம் கொடுத்திருக்க வேண்டும் ..... உங்களுக்காகத் தயாராக நான் வாசலில் காத்திருப்பேன். முதலில் கோயிலுக்குப் போய்விட்டு... சினிமாவுக்கு.....' என்று இப்படி அவள் மழையாகப் பொழிய வேண்டும் என்று அவன் எதிர்பார்த்தான்.

அவள், 'அப்படியா?' என்று கேட்டது அவனுக்கு எரிச்சலைத் தந்தது. "ஆமாம்....அப்படித்தான்!" என்று சொல்லிவிட்டு 'போனை' வைத்து விட்டான்.

அவன் வீடு திரும்பியபோது 'ஸ்பெஷல் ஸ்வீட்'டுடன் காத்திருந்தாள். அவன் அவளை அணைத்துக் கொண்டு தன் கைகளால் முகத்தை நிமிர்த்தியபோது அவள் சிணுங்கவில்லை. அவன் காத்திருந்தது இதற்கும் மேலே.

அவனை வாயைத் திறக்கச் சொல்லி ஒரு மோகனப் பார்வையுடன் ஒரு விள்ளல் ஸ்வீட்டை அவளாகப் போட்டிருந்தால் அவன் கிறங்கிப் போயிருப்பான். ஆனால் வசந்தி தட்டுடன் மேஜையின் மேல் அதை வைத்துவிட்டு அப்பால் நகர்ந்துவிட்டாள்.

இப்படி எத்தனை எத்தனையோ சம்பவங்கள்.

**வீ**ட்டுக்குத் திரும்பிய ராஜன் தன் உடையைக் களைந்து மாற்றுடை உடுத்தினான். ஒப்பனையின் கவடுகள் இன்னும் முகத்தில் இருந்தன. 'கோல்ட் க்ரீம்' தடவிக் கொண்டு படுக்கையில் சாய்ந்தான்.

"ஏன்? சாப்பிட வரவில்லையா?" என்று கேட்டாள் வசந்தி.

"இல்லை.... எனக்குப் பசிக்கவில்லை !" என்றான் ராஜன் அலுப்புடன்.

வேறு ஒருத்தியாக இருந்தால்? 'எல்லாம் பசிக்கும்.... எழுந்து வாருங்கள்,... எப்போது சாப்பிட்டது? இப்போது மணி என்ன ஆகிறது? வெறும் வயிற்றுடன் படுத்துக் கொள்ளலாமா? ஒரு வாயாவது சாப்பிட்டேன் என்று பெயர் பண்ணுங்கள். அப்போதுதான் எனக்குச் சமாதானமாக இருக்கும்!' என்று கட்டாயப்படுத்துவாள். கைகளைப் பிடித்து இழுத்துப் பலவந்தப் படுத்துவாள்.

வசந்தி பேசாமல் போய்த் தன் சாப்பாட்டை முடித்துக் கொண்டு விளக்கை அணைத்துப் படுத்துக் கொண்டு விட்டாள். ராஜனுக்கு உறக்கம் வரவில்லை.

"பெயர் வைத்திருக்கிறார்கள் வசந்தி என்று....? வசந்தத்துக்கும் இவளுக்கும் எத்தனை தூரம்? பொருத்தமாக மரக்கட்டை என்று பெயர் சூட்டியிருக்கலாம். மரக்கட்டை நல்ல செலக்ஷனாக இருந்திருக்கும்!" என்று நினைத்துக் கொண்டான் ராஜன்.

மறு நாள் தன்னைப் பார்க்க வந்த ஆத்ம நண்பன் கோபாலிடம் தன் குறையை வெளியிட்ட பிறகுதான் அவன் மனக் கனம் குறைந்தது.

**அ**டுத்த ஞாயிற்றுக்கிழமை. பிற்பகல் இரண்டு மணி.

மாடியில் தன் அறையில் படுத்து உறங்கிக் கொண்டிருந்த ராஜன் விழித்துக் கொண்டான். அன்று மாலை அவனுக்கு நாடகம் இருந்தது. நான்கு மணிக்குப் புறப்பட்டாக வேண்டும். கீழே பேச்சுக் குரல் கேட்டுத் தயங்கினான். வசந்தியா இப்படி வாதாடுகிறாள்? யாருடன் இந்தத் தர்க்கம்? வந்திருந்தது ராதா அல்லவா? வாதாடுகிறது உடன் படித்த அருமைத் தோழி அல்லவா? மாடிப்

படி வலையில் அவர்கள் பார்க்காதபடி நின்று கொண்டான் ராஜன்.

''நீ என்னதான் சொல், வசந்தி! நான் ஒப்புக் கொள்ளமாட்டேன். காதல் காட்சிகளில் உன் வீட்டுக்காரர் கொஞ்சம் 'ஓவராக'த்தான் நடிக்கிறார்'' என்றாள் ராதா.

''காதல் காட்சி என்றால் ஒட்டித்தான் நடிக்க வேண்டும். கண் ஜாடையாலும் முக பாவத்தாலும் மட்டும் நடித்தால் முன்னால் இருக்கும் மூன்று வரிசைகளுக்குத்தான் தெரியும். பின்னால் இருப்பவர்கள், 'இவன் என்ன சிலைபோல் நிற்கிறான்?' என்று நினைக்கமாட்டார்களா?'' என்று கேட்டாள் வசந்தி.

''அதற்காக அந்தப் பெண்ணைத் தொட்டுத் தொட்டு இழுத்துப் பிடித்துக் கொண்டுதான் நடிக்க வேண்டுமா?.... நீ கொஞ்சம் எச்சரிக்கையோடு இரு....!'' என்று யோசனை சொன்னாள் ராதா.

வசந்தி சிரித்தாள். ''உனக்கென்ன?..... யாருக்கும் அந்தப் பயம் வேண்டாம். அவர் குழந்தை மாதிரி.... மனசில் ஒன்றும் வைத்துக் கொள்ள மாட்டார். எந்தத் தப்பான வழிக்கும் அவர் போகமாட்டார்.....''

'பரவாயில்லையே! நல்ல போடு போடுகிறாள்!' என்று நினைத்துக் கொண்டான் ராஜன்.

''வசந்தி..... நான் ஒன்று கேட்கிறேன். இந்த நாடகம் உண்மையில் நன்றாக இருக்கிறதா? உன் வீட்டுக்காரர் எழுதியது. நடிப்பது என்பதற்காக இல்லாததைச் சொல்லக் கூடாது.... உண்மையைச் சொல். இந்த சினிமா ஸ்டார் குங்குமவர்ணா மட்டும் நாடகத்தில் தலையைக் காட்டாவிட்டால் நாடகம் நன்றாக இருக்குமா? இத்தனை கூட்டம் வருமா?''

''ராதா! நீ இத்தனை பொறாமை பிடித்தவள் என்று எனக்கு இன்றுதான் புரிகிறது. உன் வீட்டுக்காரர் இவரைவிடப் படித்தவர். ஒரு வரி எழுதச் சொல்லேன். ஒரு சிறு காட்சியில் நடிக்கச் சொல்லேன். ஒவ்வொரு வார்த்தையும் எப்படி எழுதியிருக்கிறார், தெரியுமா? அந்த இடத்தில் அந்தச் சொல்லை எடுத்துவிட்டால் அதற்கு ஈடாக வேறு வார்த்தை போட முடியாது.... நாடகத்தின் வெற்றிக்குப் பாதி அவர் எழுதிய வசனம் காரணம். இன்னொரு பாதி அவர் நடிப்பு. இந்தக் குங்குமவர்ணா கிடக்கிறாள். ஒரு கன்றுக்குட்டி நடித்தால்கூட நாடகம் களை கட்டும்!'' என்றாள் வசந்தி பெருமிதத்துடன்.

''உன் வீட்டுக்காரர் ஆயிற்றே நீ விட்டுக் கொடுப்பாயா?'' என்று சிரித்தாள் ராதா.

''ஏண்டி! அநாவசியமாக மறைக்க வேண்டும்? நான் இந்த வீட்டில் இருப்பது என் பூர்வ ஜன்ம பூஜாபலன். இவர் தகுதிக்கு என்னைவிட எத்தனையோ பேர் இவருக்குக் கிடைத்திருப்பார்கள். என் அதிர்ஷ்டம்...''

வசந்தியா இப்படிப் பேசுகிறாள்? ராஜனுக்கு மலைப்பாக இருந்தது. இத்தனை தூரம் அவனைப் பற்றி அவள் நினைத்திருந்தாளா? இத்தனை மதிப்பு அவன்மேல் அவள் வைத்திருக்கிறாளா?

''இதோ பார் ராதா,.... அவர் மட்டும் நினைத்திருந்தால் இத்தனை நேரம் பெரிய சினிமா 'ஸ்டார்' ஆகி இருக்கலாம். ஏன் பேசாமல் இருக்கிறார்? எனக்காக.... கேவலம் எனக்காக. அப்படிப் பிரபலமான பிறகு தன் நடத்தையில் மாறுதல் ஏற்படுமோ என்று பயப்படுகிறார். எனக்கே இல்லாத அச்சம் அவருக்கு இருக்கிறது. தெரியுமா உனக்கு? இத்தனை கதைகள் எழுதுகிறாரே? இத்தனை நாடகங்கள் நடிக்கிறாரே.... ஆபீஸ் வேலையில் கொஞ்சமாவது அசிரத்தை உண்டா? போன மாதம்கூடத் தனியாகச் சம்பள உயர்வு கிடைத்திருக்கிறது.....''

''போதுமடி, போதும். உன் வீட்டுக்காரர் அந்த ராமச்சந்திர பிரபுவேதான்... ஒப்புக்கொள்கிறேன்.... நான் சொன்னதெல்லாம் தப்பு, தப்பு... கன்னத்தில் போட்டுக் கொள்கிறேன். அப்போதே வந்தது... இப்போது காப்பியாவது தருவாயா, இல்லை கோபத்தில் வெளியே போ என்று விரட்டியடித்து விடுவாயா?'' எனக் கேட்டுச் சிரித்தாள் ராதா.

''ஐயையோ... மணி மூன்றாகப் போகிறது. அவர் எழுந்துவிடுவார்!'' எனக் கூறிய வஸந்தி சமையலறைப் பக்கம் விரைந்தாள்.

ராஜன் இரும்பவும் தன் படுக்கையில் படுத்துக்கொண்டு தூங்குவது போல் நடித்தான். பத்து நிமிடங்களில் காப்பியும் கையுமாக அவனைப் பார்க்க வந்த வஸந்தியைப் பாய்ந்து இழுத்தான்.

''விடுங்கள், கீழே ராதா வந்திருக்கிறாள்!'' என்று சிணுங்கினாள் வஸந்தி.

''ராதா என்ன! அந்தக் கோகுலப் பெண்களை இரணாக வந்தாலும் கூட எனக்கு அக்கறை இல்லை. என் வஸந்தியுடன் நான் இருப்பதற்கு யார் நாற்றி நாற்பத்தி நாலு போட முடியும்?'' என்று கேட்டு வசந்தியைத் தன் அருகில் இழுத்துக் கொண்டான்.



# எல்லாம் எழிலே!

அலங்கா ரங்கள் அழகென்றால்
அணிஇல் நிலையும் ஓர் அழகாம்!

முழங்கு இதம் அழகென்றால்
முடியா மோனம் ஓர் அழகாம்!

ஆண்மை ஆற்றல் அழகென்றால்
அபலை எளிமை ஓர் அழகாம்!

பொலியும் பசுமை அழகென்றால்
பொட்டல் பாழும் ஓர் அழகாம்!

கூசும் ஒளியும் அழகென்றால்
குவியும் இருளும் ஓர் அழகாம்!

விரையும் வேகம் அழகென்றால்
மெல்ல ஊர்தல் ஓர் அழகாம்!

பொல்லா தேது? நலன் ஏது?
எல்லாம்விரும்பிஅளித்தான்யார்?
எல்லாம் படைத்த நாயகனே
எழிலாய் அவையுள் ஒளிந்தான்
பார்!

— தம்பி சீனிவாசன்




மறுநாள் தன் அலுவலகத்திலிருந்து வீடு திரும்பும்போது நண்பன் கோபாலை அவன் வீட்டில் இறக்கி விட்டான் ராஜன்.

''உள்ளே ஒரு நிமிடம் வந்து விட்டுப் போடா!'' என்று கூப்பிட்டான் கோபால் உரிமையுடன்.

சில நிமிடங்களில் கையில் டீயும் பிஸ்கெட்டுமாக உள்ளே நுழைந்தாள் ராதா—கோபாலின் இல்லத்தரசி.

ராஜன் முகத்தைத் திருப்பிக்கொண்டான். தன்னைப் பற்றி எத்தனை கேவலமாக எடை போட்டிருக்கிறாள் அவள் என்ற கோபம் அவனுக்கு.

''ராதா! உன்னிடம் இவனுக்கு ரொம்பக் கோபம்... காலையிலிருந்து சொல்லிச் சொல்லி மாய்ந்து போகிறான்!'' என்றான் கோபால் கண்களைச் சிமிட்டியபடி.

''நான்தான் சொன்னேனே. நீங்கள்தான் கேட்கவில்லை. இது விஷப் பரீட்சை. கணவன் மனைவிக்குள் ஆயிரம் இருக்கும். நாம் அயலார்...''

ஒன்றும் விளங்காமல் விழித்தான் ராஜன்.

''பரீட்சையில் பலன் கிடைத்ததா இல்லையா?... ராதா... நம் 'எக்ஸ்பரிமெண்ட்' வெற்றி. 'வசந்தியைப் போல் என் வசந்தியைப்போல் இந்தப் புவனத்தில் யாருண்டு!' என்று காலையிலிருந்து பாடிக் கொண்டிருக்கிறான். நாம் பேசாமல் இருந்தால் நாளைக்கு மேடையிலும் பாடிவிடுவான்!'' என்றான் கோபால்.

''இது என்ன நாடகம்? சஸ்பென்ஸ் என் கதையை விடப் பிரமாதமாக இருக்கிறதே!'' என்றான் ராஜன்.

''அன்றைக்கு நீ பிரமாதமாக வருத்தப் பட்டுக் கொண்டாய் அல்லவா? மரக்கட்டை வசந்தி என்றாய்... ராதா இல்லை என்று மறுத்தாள். அவள் நீறுபூத்த நெருப்பு என்றாள். 'மேலே வெண்மை படர்ந்திருப்பதால் சுடாது என்பது இல்லை. ஊதினால் பற்றிக்கொள்ளும்' என்றாள். கொஞ்சம் ஊதினேன். இப்போது பற்றிக் கொண்டு எரிகிறது!'' என்றான் கோபால்.

ராதா நெகிழ்ச்சியுடன் கூறினாள்: ''வசந்தி உங்களைக் கணவனாக மட்டும் நினைக்க வில்லை. தெய்வமாகப் பூஜிக்கிறாள். உங்களுக்குத் தெரியாதது எதுவும் இல்லை என்று நினைக்கிறாள். குருவிடம் இருக்க வேண்டிய பக்தி அவளுக்கு உங்களிடம் இருக்கிறது. ஒரு மாணவன் ஆசிரியருக்குக் காண்பிக்கவேண்டிய மரியாதையைக் காண்பிக்கிறாள். உங்களைப் பற்றி ஒரு வார்த்தைகூடத் தரக் குறைவாக — எவ்வளவு தான் வேண்டியவர்கள் சொன்னாலும் நம்ப மாட்டாள். அப்படிப் பேசியவர்களைக் குதறி எறிந்து விடுவாள்.''

ராஜன் பதிலே பேசவில்லை. எப்படிப்பட்ட பாக்கியம் தனக்குக் கிடைத்திருக்கிறது என வியந்து போனான். வசந்தியைப் பற்றிய எண்ணங்களில் மூழ்கிப் போனான்.

''இனி இவனை எழுப்புவது கஷ்டம். பெண்டாட்டியைப் பற்றிக் கனாக் காண ஆரம்பித்து விட்டான்!'' என்று கோபால் இடுப்பில் குத்தியவுடன்தான் ராஜன் விழித்துக் கொண்டான்.


நான் பழைய காங்கிரஸில் இருந்தபோது காமராஜ் தெருவில் குடி புகுந்தேன்...


புது காங்கிரஸுக்கு நான் மாறினதும், இந்திரா காலனிக்கு வீடு மாறி விட்டேன்...


சுதந்திராவுக்கு நான் தாவினதும், ராஜாஜி நகரில் இடம் பிடித்தேன்...


இப்ப, அண்ணா தி.மு.க. வில் சேர இருப்பதால் ஒரு குழப்பம்!...


ஏன் எதற்குக் குழப்பம்?


எம்.ஜி.ஆர் நகர் போவதா? அண்ணா நகர் போவதா என்றுதான்!

# Prestige பிரஸ்டீஜ்

# பிரஷர் குக்கர்கள் சிறந்தவை. சான்று: லட்சக்கணக்கான குடும்பத் தலைவிகளின் அனுபவம் மற்றும் கீழ்க் கண்ட உண்மைகள்




## அதிக கொள்ளளவு




பிரஸ்டீஜ் மூடி வெளிப்புறம் பொருந்துவதால் அதிக உணவு சமைக்க நிறைய இடம் கிடைக்கிறது.

உள் அடுக்குகள் பெரியவை. காரணம் பிரஸ்டீஜின் கொள்ளளவு வேறு வகை குக்கர்களை விட 1/3 பங்கு அதிகம்.

## விரைவு

பிரஸ்டீஜில் உபயோகிக்கப்படும் சிறப்பான அலுமினியக் கலப்பு உலோகம், சீராகவும் விரைவாகவும் சூடு பரவ உதவுகிறது. அதனால் நேரமும் எரிபொருளும் மிச்சம்.

## பாதுகாப்பானது



மூடுவதற்கு இரட்டிப்பு வசதியுள்ள மூடி. மூன்று கட்டங்களில் அமைந்துள்ள பின்டிலுடன் கூடிய ரப்பர் பாதுகாப்பு அடைப்பான், குக்கரை பாதுகாப்பானதாகச் செய்கிறது.

பிரஸ்டீஜ் 6 அளவுகளில் கிடைக்கிறது. விற்பனைக்குப் பின்பும் பணிபுரிய பெருமளவில் வசதி உண்டு.

வாழ்நாள் முழுவதும் உழைப்பதற்கு உறுதியளிக்கிறது.




டிடி.(பிரைவேட்)லிமிடெட்
பெங்களூர் 560016



● 'விஷய ஞானத்துடனும் விழிப்புடனும் இருக்கும் மக்களே ஜனநாயகத்தின் அஸ்திவாரம். மக்கள் இவ்வாறு இருக்கப் பெரிதும் உதவுபவை நூலகங்கள்' என்றார் நமது ராஷ்டிரபதி கிரி. சென்னையில் அண்மையில் வெள்ளி விழா கொண்டாடிய அமெரிக்க நூலகம் அந் நாட்டின் மாபெரும் போராட்டங்கள், மகத்தான வெற்றிகள் பற்றிய நூல்களுடன் தோல்விகளைக் கூறும் நூல்களையும் தன்னிடத்தில் கொண்டுள்ளது. பிறர் படித்துப் படிப்பினை பெற. முப்பதாயிரம் நூல்களையும் இரு நூற்று ஐம்பது சஞ்சிகைகளையும் கொண்டுள்ள இந் நூலகம் தபால் மூலமும் தேவையானவர்களுக்குப் புத்தகங்களை அனுப்புகிறது. மகாராஜாக்கள் முதல் மெக்கானிக்குகள் வரை பலதரப்பட்டவர்கள் பயன்படுத்துகிற இந் நூலகத்தில் விஞ்ஞானம், பொருளாதாரம், இலக்கியம் போன்ற பல துறைகளில் நூல்கள் இருந்த போதிலும் நீதித்துறை பற்றிய புத்தகங்கள் இல்லாதது ஒரு குறை என்று குறிப்பிட்டார் வெள்ளி விழாவுக்குத் தலைமை வகித்த நீதிபதி திரு வீராசாமி.



● சென்னை சேத்துப்பட்டில் கூவம் ஆற்றில் சிறிய பாலம் பழுதுபட்டதும், போக்குவரத்து நீண்ட நாட்கள் ஸ்தம்பித்தது. இன்னமும் பஸ்கள் நீண்ட தொலைவு சுற்றி வரும் நிலை ஏற்பட்டுள்ளது. கங்கா நதியில் டப்ரின் பாலத்தைச் செப்பனிட நேர்ந்த போது, அந்தப் பாலத்தில் ஐம்பத்திரண்டு ரயில்கள் போக்குவரத்துக்குக் குந்தகம் வராமல், ஒரு பொறியியல் வல்லுனர் பாலத்தைச் செப்பனிட்டதை அன்று ஹிமாலய சாதனை என்று வர்ணித்தனர். இந்த அரிய சாதனையைச் செய்த பொறியியல் வல்லுனர் திரு எம். கணபதி இந்திய பொறியியல் கலைக் கழகத்தின் தலைவராகத் தற்போது தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்.

இந்தப் பொறியியல் கழகத்தில் 75,000 பொறியியல் கலைஞர்கள் அங்கத்தினர்களாக இருக்கிறார்கள். 1973 பிப்ரவரி 15ந் தேதி இதன் பொன் விழா சென்னையில் நடக்கும். ராஷ்டிரபதி கிரி இந்தப் பொன் விழாவில் கலந்து கொள்ளப் போகிறாராம்.



● "மணிக்கொடி இதழ்கள் தயாராகி விட்டன. ஆனால் தபாலில் அனுப்பத்தான் பணம் இல்லை!"

"இதோ இருக்கிறதே!" பையிலிருந்து ஒரு பத்து ரூபாய் நோட்டை எடுத்து நீட்டுகிறது ஒரு கை.

அந்தக் கையின் பணி இதுவரை பிறர் அறியாப்பணியாக இருந்தது. ஆனால் அண்மையில் நடைபெற்ற ஸ்ரீ ந. சிதம்பர சுப்பிரமணியத்தின் மணிவிழாவின்போது அந்தக் கை அவருடைய கைதான் என்னும் ரகசியம் அம்பலமாகியது.

இலக்கிய வளர்ச்சிக்கு இப்படிக் கை கொடுத்த கை எழுத்துலகத்துக்கும் பல அருமையான படைப்புக்களை வழங்கியுள்ளது. சக்கரவாகம், சூரியகாந்தி, வருஷப் பிறப்பு என்ற கதைத் தொகுதிகளும், ஊர்வசி என்ற ஓரங்க நாடகத் தொகுப்பும், இதய நாதம், நாகமணி, மண்ணில் தெரிபுது வானம் என்ற நாவல்களும் இதற்குச் சான்று.



● ரஷ்யா, மோல்டாவியப் பகுதியிலிருந்து நாடோடி சங்கீத நடனக் குழுவினர் சென்னைக்கு விஜயம் செய்து சிறப்பாகப் பாடி ஆடிக் களிக்க வைத்தனர்.

இக் குழுவில் நாற்பத்தி மூன்று பேர் இருக்கிறார்கள். இவர்கள் தகுதிக்கேற்ப மாதம் 1200 ரூபாயிலிருந்து 2400 ரூபாய் வரை சம்பளம் கிடைக்கிறதாம்! வயதாகி ஓய்வுபெற்றால் பென்ஷன் உண்டு. வாழ்க்கைப் பிரச்னை இல்லை.




# தசரதருக்கு அழைப்பில்லை!

ஒரு புது மாப்பிள்ளை. பிறந்தகத்தில் இருந்த மனைவியைக் காண ஆவல் கொண்டார். அழகாகச் சிங்காரித்துக் கொண்டு புறப்பட்டார்.

மழை பெய்து ஓய்ந்திருந்த மாரிக் காலம். பல இடங்களில் சேறும் சகதியுமாக இருந்தது. எப்படியோ உடை கெடாமல் தாண்டித் தாண்டிச் சென்றார். சிறிது தூரம் சென்றதும் ஒரு வாய்க்கால் குறுக்கிட்டது. தண்ணீருக்குப் பதிலாக ஒரே உளை. தாண்டினால் கட்டாயம் உடை கெட்டுவிடும் என்ற நிலை. என்ன செய்வது? யோசனையில் ஆழ்ந்தார்.

இக்கரைக்கு அக்கரை பச்சை என்ற நினைப்பில் ஒரு பசு மாடு வாய்க்காலைத் தாண்ட முயன்று சகதியில் சிக்கித் தவித்துக் கொண்டிருந்தது.

பசுவைப் பார்த்த புது மாப்பிள்ளை பூரித்துப் போனார். அதன் முதுகில் ஒரு காலை வைத்து அழுக்குப் படாமல் தாண்டிக் குதித்து விட்டார். அந்த எக்களிப்பில் மிதந்தவாறே வேட்டகத்தை அடைந்தார்.

ஆவலுடன் மனைவியைக் காணச் சென்றவரின் உருவம் மாறிக் கழுதையின் உருவமாகி விட்டது. மனைவி, கணவனின் இந்தக் கோலத்தைக் கண்டு அயர்ந்துவிட்டாள். ஆயினும் என்ன செய்வது? கழுதையாகிவிட்டாலும் கரம் பற்றிய கணவன் அவன்தான் என்று அவளுக்கு நிதரிசனமாகத் தெரிந்திருந்தது. தன் விதியை நொந்து கொண்டும் அழுது புலம்பிக் கொண்டும் கழுதைக் கணவருடன் ஊர் ஊராகச் சுற்றலானாள். எங்கேயாவது இவருக்குப் பாவ பரிகாரம் கிட்டாதா என்ற நைப்பாசையோடு!

இப்படிச் சுற்றியவாறே அவள் ஜனக மன்னரது தலைநகரமான மிதிலையை அடைந்தான். ஓர் இளம் பெண் ஒரு கழுதையைக் கணவராகக் கொண்டு வந்திருப்பதைக் கண்டு ஜனக மன்னருக்கு ஒரே ஆச்சரியம், அதிர்ச்சி! அவர் அறிவாற்றல் மிகுந்த சான்றோர்களைத் தருவித்து இதன் இரகசியத்தைக் கேட்டார். ''இந்தக் கழுதை உருவத்தான் இந்த இளம் பெண்ணின் கணவன் என்பதில் ஐயம் இல்லை; இவன் நல்ல அறிவாளியுங்கூட. ஆயினும் படுகோரமான ஓர் அதர்மச் செயலைப் புரிந்துவிட்டான். மனைவியைக் காண வேண்டும் என்ற மோகத்தில் இவன் வேட்டகத்துக்கு வந்து கொண்டிருந்த பொழுது வழியில் ஒரு பசு உளையில் சிக்கித் தவித்துக் கொண்டிருப்பதைக் கண்டான். அதைக் கரையேற்றி விட வேண்டியவன், அந்த அறச்செயலை மறந்து, தன்னல வசப்பட்டு அதன் முதுகில் காலை வைத்து உளையைக் கடந்திருக்கிறான். தன் உடை உளையில் சிக்கிச் சகதியாகிவிடக் கூடாதே என்ற எண்ணத்தில், அவன் அறம் மீறிய இச்செயலைச் செய்துவிட்டான். அந்தப் பாவத்தின் காரணமாகத்தான் இவனுக்குக் கழுதை உருவம் கிட்டியிருக்கிறது!'' என்றனர்.

ஜனகருக்கு அவன்மீது இரக்கம் ஏற்பட்டது. 'இளம் வயது. மோகம் முப்பது நாள் என்னும் அநுபவ அறிவு பெறாதவன்!' என்று எண்ணியவர், ''இந்த இளைஞன் மீண்டும் எப்



''மின்வெட்டில் ஃபேன் ஓடாதே என்பதால், இந்த அடை விசிறிக்கறதுக்காகக் கேட்டேன்; சாப்பிடறதுக்கு இட்லி சாம்பார் கொண்டா!''

படியாவது மனித உருவம் பெற முடியாதா?'' என்று அவர்களைக் கேட்டார்.

''மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்றிலும் கற்பிற் சிறந்த ஒருத்தி தன் கையினால் இவன் மீது நீரைத் தெளித்தால், இவன் மீண்டும் தன் பழைய உருவத்தைப் பெறலாம்!'' என்றனர் அவர்கள்.

ஜனக மன்னர் முறுவலித்தார், இது என்ன பெரிய காரியம் என்பது போல! அத்தம்பதி தங்குவதற்கு வேண்டிய வசதி செய்து கொடுத்தார். இரவு அந்தப்புரத்தை அடைந்தவர் தமது அரசிகளிடம் இது விவரத்தைக் கூறி, இளம் பெண்ணின் கணவனை மீண்டும் மனிதனாக்குமாறு வலியுறுத்தினார். ஆனால் ஒவ்வோர் அரசியும் மற்ற அரசிகளின் முகத்தைப் பார்த்துப் பார்த்து வெட்கத்தினால் தலை கவிழ்த்துக் கொண்டனர்; அந்த ஆற்றல் தங்களுக்கு இல்லை என்பதைச் சொல்லாமல் சொல்லி விளங்க வைத்தனர்.

வருத்தமுற்ற ஜனக மன்னர் அங்கிருந்து எழுந்து சென்றார். மறுநாள் காலையே கற்பில் சிறந்த பெண்ணைத் தேடி வருமாறு உத்தரவு பிறந்தது. ஆனால் அவரது ஆட்சி முழுவதும் சல்லடை போட்டுச் சலித்தும் ஒருத்திகூடக் கிடைக்கவில்லை.

கடைசியில் ஜனகர் நம்பிக்கை இழந்து அயோத்தி மன்னர் தசரதருக்கு ஒரு கடிதம் அனுப்பினார், உங்கள் இராஜ்யத்திலிருந்து ஒரு பதிவிரதைப் பெண்ணை அனுப்பி வையுங்கள் என்று.

ஏதோ விசேஷம் இருக்கிறது என்று தசரத மன்னர் ஊகித்துக் கொண்டார். உடனே ராணி கௌசல்யையை அணுகி மிதிலைக்குப் போய் வருமாறு வேண்டினார். ராணி கௌசல்யை மறு பேச்சுப் பேசாமல் உடனே தயாராகி விட்டாள், புறப்பட.

தேரில் ஏறி அவள் புறப்படத் தயாராயிருந்த பொழுது ராணி கைகேயி அவளை அணுகி, ''நான் இருக்கும்பொழுது நீங்கள் சிரமப்படலாமா, அக்கா? எனக்கு உத்தரவு தாருங்கள். போய் வருகிறேன்!'' என்றாள்.

கைகேயியின் வற்புறுத்தலின் பேரில் கௌசல்யை நின்று கொண்டாள். கைகேயி தேரில் அமர்ந்து செல்ல ஆயத்தமானாள். இவ்விவரம் அறிந்த சுமத்திரை ஓடோடி வந்து, ''அக்கா! நீங்கள் மிதிலை போகப் போகிறீர்களா? நான் இருக்கும்பொழுது நீங்கள் போவது உசிதமாகப்படவில்லை. ஊர் உலகம் என்ன சொல்லும்?'' என்றாள்.

கைகேயி போகும் எண்ணத்தைவிட்டாள். ஆனால் சுமித்திரையும் மிதிலை போக முடியவில்லை. அவள் தேரில் ஏறுவதைக் கண்டதும் அவள் சேடி வந்து, ''ராணியம்மா! தங்களுக்கு அடிமை நான் இருக்கும்பொழுது, நீங்கள் மிதிலை செல்வது அழகல்ல. நீங்கள் போக வேண்டாம். உங்களுக்குப் பதிலாக நான் போய் வருகிறேன்!'' என்றாள்.

இப்படியாக ஒருவருக்குப் பதில் ஒருவர் என்று பல படிகள் தொடர்ந்து கடைசியில் அயோத்தியைச் சேர்ந்த சக்கிலியப் பெண் ஒருத்தி, கற்புக்கரசியாக மிதிலாபுரியை அடைந்தாள். ஜனகர் அவளைக் கண்டதும் பதறிவிட்டார். 'ஒரு கீழ்ச் சாதிப் பெண் ஒரு மேல்சாதியினன்மீது எப்படி நீர் தெளிக்க முடியும்?' என்று யோசனையில் ஆழ்ந்தார்.

அதை அறிந்த அயோத்திப் பெண் கூறினாள்: ''நான் இந்தக் கிணற்றிலிருந்து நீரை எடுக்கிறேன். அந்த நீரை ஒரு மேல் குலத்தோன் அவர் மீது தெளிக்கட்டும்!''

அவளது இந்த யோசனை ஏற்கப்பட்டது. அவள் நீர் எடுத்துத் தர ஓர் அந்தணர் கழுதை உருவத்தினன் மீது தெளித்தார். உடனே அந்தக் கழுதை முகத்தான் தன் சுய உருவத்தைப் பெற்றான். இளம் பெண்ணுக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை. ஜனக மன்னருக்குத் தன் இதயம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துவிட்டு, தன் கணவரோடு தன் நாட்டுக்குச் சென்றாள்.

ஜனக மன்னர் இந்த நிகழ்ச்சியை நினைத்துப் பார்த்தவர் யோசித்தார்: அயோத்தி வாழ் சாதாரணச் சக்கிலியப்பெண்ணுக்கே இத்தனை ஆற்றல் இருக்கிறதே! அங்கே எத்தனை பெரிய வீரர்கள் இருப்பார்களோ, யார் கண்டார்கள்? தசரத மன்னருக்கு எந்த வேலையும் செய்வதில் சிரமம் இராது. எதையுமே எளிதில் செய்து முடித்து விடுவாராயிருக்கும்!

இந்த அச்சம் காரணமாகத்தான் ஜனக மன்னர் வில் வேள்விக்கு வருமாறு தசரத மன்னருக்கு அழைப்பு அனுப்பவில்லை. மன்னர் தசரதருக்குப் பதிலாக அயோத்தியைச் சேர்ந்த ஒரு சக்கிலியனே வந்து வில்லை எடுத்து நாணேற்றிவிட்டால்....? இதை எண்ணிப் பார்த்த ஜனகர், என்ன என்னவோ எண்ண அலைகளில் மிதந்தார்; தசரதருக்கு அழைப்பு அனுப்பவும் மறந்தார். —ரா. வீ.

**மகதத்தில் வழங்கும் கர்ண பரம்பரைக் கதை**

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras 600031
Managing Editor: T. Sadasivam

**ANNOUNCING!**

The sale of

**BLENDED AND FANCY FABRICS**

made by mixing cotton and

**GRASIM** STAPLE FIBRE

from to-day at

**AKASH-DEEP, SANDHURST BRIDGE, CHOWPATTY**

- Attractive Fancy Dress material for ladies
- Immaculate Bush Shirtings for gents
- Decorative Tapestry and Curtain materials
- Priced cheaper than cotton fabrics



**GWALIOR RAYON SILK MFG. (WVG.) CO. LTD., BIRLAGRAM, NAGDA (M.P.)**

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் விலை 45 சதம் (தபால் செலவு தனி)

# உங்களது பிலிம் Agfacolor இயற்கை வண்ணங்களுடன் கூடியது



ஆக்பா கலர் பிலிம்களில், கலர் பிரிண்ட்களுக்கு என்று பிரத்தியேகமாகத் தயாரிக்கப்பட்ட *ஆக்பா கலர் CNS நெகடிவ் பிலிம், மற்றும் தத்ரூபமான கலர் டிரான்ஸ்பரன்ஸிகளுக்கு என்று தயாரிக்கப்பட்டுள்ள *ஆக்பா கலர் CT 18 பிலிம்களும் உள்ளன.

சுருள் பிலிமாகவும், மற்றும் 35 mm பிலிம்களாகவும் இரு வகையிலும் கிடைக்கின்றன. எளிய முறையில் புரிந்துகொண்டு, செயலாற்றுவதற்கான விதிமுறைகள் ஒவ்வொரு பெட்டியிலும் வைக்கப்பட்டுள்ளன. இந்தியாவில் பிராஸஸ் செய்யப்படுகிறது. விவரங்களுக்கு உங்கள் அருகிலுள்ள அங்கீகரிக்கப்பட்ட ஆக்பா-கேவர்ட் டீலரை விசாரியுங்கள்:




AGI

ஏகபோக விநியோகஸ்தர்கள்:
ஆக்பா - கேவர்ட் இந்தியா லிமிடெட்
பம்பாய் - புது டெல்லி - கல்கத்தா - சென்னை

* புகைப்பட சாதனங்களின் தயாரிப்பாளர்களான ஆக்பா-கேவர்ட் ஆன்ட்வெர்ப்/லெவர்குஸன் ஆக்போர்ன் ரிஜிஸ்டர்டு டிரேடு மார்க்